ஸ்ரீ

சுபமஸ்து.

ஆரியருடைய

# சங்கீத சாஸ்திரத்தின்

## சரித்திர சங்கிரகம்.

இது

கோயமுத்தூர் சுதேச தர்மரக்ஷணி

சபையின் 3-வது வருஷோற்சவ காலத்தில்

அந்தச்சபையின் காரியதரிசியும்,

மதவிருக்ஷம்

அல்லது

பூலோகத்திலுள்ள பெரிய மதங்களின் சரித்திரம், ஸ்திரீ புருஷ

சாமுத்திரிக லக்ஷணம், இந்து தருக்க சாஸ்திரம், இராஜ

யோக சாஸ்திரம், சேலம், கோயமுத்தூர் பூமி

சாஸ்திரம், வேதாந்த சூரியோதயம், பஞ்ச

திவ்ய தேச சரித்திர முதலான

கிரந்தங்களின் கர்த்தரும்,

கோயமுத்தூர் கலாநிதி பத்திரிகாசிரியருமாகிய


சேலம், பகடால-நரசிம்மலு நாயுடு அவர்கள்


செய்த உபந்நியாசம்.




சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

[இரண்டாம் பதிப்பு.]

1909.

விலை அணா 4.

உ

இத்தேசத்து

சங்கீதத்தின் சரித்திரத்தைப்பற்றி

கோயமுத்தூர்

பொலீஸ் ஹெட்க்வார்ட்டர் இன்ஸ்பெக்டர்

மஹா-ள-ள-ஸ்ரீ த. மு. நாராயணசாமி நாயடவர்களுக்கு

எழுதிய அங்கிதம்.

---

## நிலைமண்டல வாசிரியப்பா.

அண்ட சராசர மனைத்தும் படைத்து
எண்டிசை போற்று மேகனும் பரம்பொருள்
நாத பிர்ம்மத்தால் நாத்திக மோட்டி
வேதனு மலரவன் வித்தக னறிய

ஆகா யத்தி லாத்திகங் காட்டினர்—
யோகமாய் நிற்க யூகித்த நாதமும்
பேசுமத் திரவொலி பிசகிலா வெழுத்தாய்
நேச மோடிருவகை நினைப்புடன் வகுத்து

கலை தெரி மடந்தை கச்சபி யோடு
நிலையாப் படைத்து நீண்ட நாவினில்
கொண் டரனுக்கும் கூறு நாரதற்கும்
பண்டுல கோர்க்கும் பகர் விண்ணவர்க்கும்

போதித்து நீங்களும் புகழுங்க ளென்ன
வேத மதீன்றோன் விரும்பிப் பணிக்க—
நாரத ரப்போ நாடியே சுரர்க்கு
வேத காந்தர்வ வித்தை தம் மஹதியாழ்

ஈரேழு பதினுன் கிசை யுலகங்கள்
நேராகச் சென்றே நியமஞ் செய்துய்ய—
தும்புருவருமே, துதி யாழ் களாவதி
உம்பன் விஸ்வாவஸு உருகு புருஹூதியாழ்

வாசித்துக் காட்ட வானவர் மெச்ச
ஆசு கவிபுகழ் ஆ - ஆ - ஊ - ஊ,
சித்திர சேனரும், சீர்பெறு மரம்பைகள்,
இத்தரையார் சொலும் இளங்கொடி மேனகை
கின்னர், கிம்புருஷர், கீழுல காளியாம்
பன்னக ரென்னும் பாம்புல கேசுரர்,
பாடியே புகழ்ந்தார் பரமேச்சுரனை,
நாடியே நடித்தார் நாராயணனை—
*நேமியில் ருத்திரன் நேர் நாட்டை யாதி
தாமத மற்றேழ் தாளங்கள் கூட்டி
பரதநூல் முறைப்படி பார்வதி மெச்ச
நிருத்த மாடியே நேரிசை பாடியே
சாரங்க தேவர்க்கிச் சங்கீதஞ் சொல்ல
பாரெங்கும் பரவ பிரஹலாதாஸ் வதிக்கு
இலக்கிய மிலக்கண மியற்றியே சொல்ல
கலக்கமற்றூரியர் கற்று வாழ்கவே—
நந்தியுஞ் சசியும், நாரதர், தத்திலர்,
சந்ததம் கோஹலர், சாற்று மதங்கர்,
சுக்கிரர், கவுதமர், சூடாமணியும்,
இக்குவலைய மறி யிராவ ணார்ச்சுனரும்,
காலவர், காசிபர், காத்தியா யனரும்,
சீலமோ டாதி சேட னனுமானும்,
ஜயமுனி, யச்சுதன், ஜகம் புகழ் சோமனும்,
நயம்பெறு தாளகன், நவில் சங்கீதனும்,—
சதுர விலாசனுஞ் சதுரங்க வார்த்திகன்,
மதுர மஞ்சிகரன், மகிழும் ஸ்ரீமூர்த்தியும்,
கீதார்த்த சங்கிரகன், குணமத்தீபகன்,
வேதார்த்த மறிந்த வித்தகன் பிரஹஸ்பதி,
ஆந்திர கவியும், அமை தத்தநாதனும்,
சாந்த்ரசமாப்பல் சாத்திர மீன்றூர்—

ஆழ் வாராதிக ளமையு மாசாரியர்,
தாழ்விலா நாயன்மார் தாமறிந் துய்த்தார்
மூவ கோபாலனும், முகில் தியாக ராஜனும்
காவலாக் காத்தார் கற்பக தருவை—
இத்தன்மை யான இந்து சங்கீதம்
சுத்தரும் மன்னரும் சூழ்ந்து போற்றுமையால்
தாயற்ற சேய்போல் தரணியிற் றவித்து
நோயுற்று வாட நுவலரும் புகழ் சேர்—
தஞ்சைக் கடுத்தநற் றரங்கம் பாடியோர்
மிஞ்சிய தவத்தால் மேன்முத்துக் கிருஷ்ண மால்
மகனு யுதித்த மதன் பிரபு டீகன்
அகமது மகிழ்ந்திதை யாதரித் தனரால்—
கோனியாள் கோயைக் குணபதி போலீஸ்
மாணிகள் போற்று மகிழு மேட் குவார்ட்டர்
இனிஸ்பெக்ட ரென்னு மிசையு முத் யோகன்
கனி சொல் பொருளுடன் கற்றூர்க் கீவோன்
இடையுடை மாதர்கட் கின்புறு மதவேள்
படை வீரர் புகழும் பாக்கியன் பிரதாபன்
கொடைதனில் கருணன், கோபாலன் பக்தன்,
நடை மெலிந்தோர்க்கு நண்பன்,—கண்ணன்
பாராயணத்தால் பஜனை செய் துய்வோன்.
நாராயண சாமி நாயடு காரே.

இங்ஙனம்:

சேலம், பகடால, நரசிம்மலு நாயடு.

---

ஶ்ரீ

ஹிந்து

# சங்கீதத்தின் சரித்திர சங்கிரகம்.

கோயமுத்தூர் சுதேச தருமரக்ஷணி சபையின்

மூன்றாவது வருஷோத்சவ காலத்தில்

சேலம், பகடால, நரசிம்மலு நாயடவர்கள் செய்த

## உபந்நியாசம்.

ஶ்ரீ பிரபாகரனால் பிரகாசிக்கும் இந்தப் பிரபஞ்சத்தின் சிருஷ்டியிலடங்கிய ஆத்மகோடிகளுக் கெல்லாம் ஆநந்தம் தருவதில் சங்கீதத்துக்குச் சமானமானது வேறொன்று மில்லை; ஆனதுபற்றியே, இதை இத்தேசத்து வேதாகம புராண இதிஹாஸங்களி லெல்லாம் சிறப்பித்துச் சொல்லப் பட்டிருக்கிறதன்றியில் ஶிஶுர்வெத்தி பஶுர்வெத்தி வெத்தி கா3நரஸம் ப2ணி:—கானரசத்தைக் குழந்தைகளும் அறியும், பசுவும் அறியும், பாம்பும் அறியும் என்று இத்தேசத்துக் கவிகள் புகழ்ந்து கொண்டாடி வருகிறார்கள். இந்தச் சங்கீதத்தின் பெருமையைப்பற்றி இத்தேசத்தார் மாத்திரமல்ல; இப்போது உலகில் மஹோன்னத பதவியிலிருக்கும் ஆங்கிலேயருடைய மஹா கவி சிரேஷ்டராகிய ஷேக்ஸ்பியர் (Shakespeare)என்னும் நாடகாசிரியர் "தமக்குள்ளே பாடும்படியான வரத்தைப் பெற்றிராவிடினும், பிறர் பாடுவதை யாவது கேட்டு இரங்காதவர் கொள்ளை, கொலை முதலான கொடும்பாவங்களுக்கு அஞ்சார்கள், அவர்கள் எண்ணங்கள் பல மடங்கிலும் இருண்டிருக்கும்; ஆதலால் அத்தன்மையானவரை நம்பி மோசம் போகாதே"—என்று சொல்லி

யிருக்கிறார். இப்படி சங்கீதத்தின் பெருமையைப் பாராட்டி வருகிறவர்கள் கேவலம், கல்வியும், சீர் திருத்தமும் பெற்ற ஜாதியார் மாத்திரமல்ல; தம்மைப் போன்ற நரஜீவர்களையே உயிரோடுபதைக்கப் பிடுங்கித் தின்னும் கானிபால்ஸ் (Cannibals) என்ற அதி மிருகப்பிராயமான ஜனங்களும் தமது சுபாசுப காலங்களில் ஓர்வித சங்கீதத்தை யனுசரித்து ஆநந்திப்பதாக உலக சரித்திரம் முறையிடுகின்றது.

ஆகவே, ஆதிகாலந்தொட்டு இந்தச் சங்கீதத்தின் அருமைப் பெருமையை அண்டத்தின் அநேக ஜாதியாரைப் பார்க்கினும் ஆரியராகிய இத்தேசத்தார் ஆழ நீளமாக வறிந்தவர்களாகையால்,

'கீதவாதித்ர ந்ருத்யானாம் த்ரயம் ஸங்கீதமுச்யதே |
காலஸ்யாத் உபாநக்வாத்யம் கீதமித்யபிதீயதே ||

என்னும் சுலோகத்தினால் கீதம், வாத்தியம், நிருத்தியம் என்னும் பொருள்களடங்கியது சங்கீதம் என்றும்

வைதத்வம் ஸவதோத்தானாம் நிவர்த்திஜஸ்மதாதநாம்
நாதஸ்ய தயாநம்தரஷிதீய ஸேவாஸதே ||

என்னும் சுலோகத்தினால் "வீணை வாத்தியமென்னும் தத்துவ ஞானத்தையுடைய சுருதி அர்த்தத்தை கிரஹித்துக் கொண்டு சுருதி ஜாத்தியாதிகளால் பரமேசுவரரை உபாசிக்க வேண்டு"மென்றும்சொல்லியிருக்கின்றனர். ஆரியராகிய இத்தேசத்தார் சங்கீதத்தை இவ்வளவு மேன்மையாகக் கொண்டாடி வந்ததற்குக் காரணம் யாதென்று யோசிக்குங்கால், இந்தச் சங்கீதமானது பரமேசுவரருடைய இருப்பை ஸ்தாபிப்பதற்குச் சிறந்த சாதனமாக விருந்ததே. அதாவது—சார்வாகாதி நாஸ்திகர்கள், பிரத்தியக்ஷமாகக் கண்களுக்குத் தோன்றாத வேறு வஸ்துக்கள் உலகத்தில் இல்லையென்றும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் பூதங்களைத் தவிர, ஆகாயமென்னும் ஒரு பூதம் இல்லையென்றும் சாதித்து வந்தபோது கௌதமரிஷியால் நியாய சாஸ்திரமும், கபிலரால் சாங்கிய

சாஸ்திரமும், பதஞ்சலியால் யோகசாஸ்திரமும், வியாசரால் வேதாந்த சாஸ்திரமும், ஜைமினியால் மீமாம்ஸா சாஸ்திரமும் ஸ்தாபிக்கப்பட்டு இந்த மீமாம்ஸா சாஸ்திரத்தை ஸ்தாபித்த ஜைமினியானவர்: சப்தரூபமாகிய பிரம்மமே சிருஷ்டிகர்த்தாவென்றும், அந்தச் சப்தபிரம்மமே அநாதியென்றும், அது ஆகாயமென்னும் பூதத்துக்குள் அடக்கம் என்றும், அந்த ஆகாயமாகிய பூதம் கண்களுக்குப்பிரத்தியக்ஷமாகா விடினும், அதிலிருந்து ஜனிக்கும் சப்தத்தினால் பல்லுயிரும் பரம சுகமடைவது பிரத்தியக்ஷமென்றும்; ஆகவே, சப்தத்திற்கு ஆஸ்தானமாகிய ஆகாயமென்னும் பூதமும், அந்த ஆகாய வடிவமான பிரம்மமும் இருப்பது பிரத்தியக்ஷ மென்றும் தருக்கசித்தாந்தமாக ஆஸ்திகத்தை ஸ்தாபித்தார்.

இப்படி ஈசுவரருடைய இருப்பை ஸ்தாபிப்பதற்கு முக்கிய காரணங்களில் ஒன்றாகிய சங்கீதத்தின் சரித்திரத்தை விவரமாக அறிவிக்கும் நூல்கள் இப்போது அகப்படவில்லை. அதற்குக் காரணம்:—

அன்னிய தேசத்தார் இத்தேசத்தின் மீது அடிக்கடி படையெடுத்து வந்து, இத்தேசத்தின் ஆத்துமதத்துவம், பிராணதத்துவம், பூதத்துவம், வைத்தியம், ஜோதிஷம் முதலான நூல்களையெல்லாம் கண்மூடித்தனமாகக் கொள்ளையிட்டுக் கொளுத்திவிட்டதைப்போலவே, இந்தச் சங்கீத சாஸ்திரத்தையும் செய்திருப்பார்களென்று தோற்றுகின்றது; மேலும் இந்த தக்ஷிண தேசத்தில் சிறந்து விளங்கிய தமிழ் சங்கங்களிருந்த காலத்தில், அகத்தியம், அவிநயம், பெருநாரை, பெருங்குருகு, முருவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், இசைநுணுக்கம், சிற்றிசை, பேரிசை, முதலான அருமையான கிரந்தங்களில் சங்கீதத்தின் பெருமையைப்பற்றி சவிஸ்தாரமாகச் சொல்லியிருக்கின்றன. அந்த நூல்களையாவது பார்க்கலா மெனில் அவைகளும் அகப்படுதல் கஷ்டசாத்தியமாக விருக்கின்றன; ஆகவே, சங்கீத சாகரமாகிய பெருநாலின் பெருமையை இக்காலத்தில் விவரமாகச் சொல்வது

அசாத்தியம்; ஆயினும், கல்கத்தாவில் குபேர சம்பத்தும், கீதாநந்த யோகமும் பெற்ற ஸ்ரீமான் சுரீந்திரநாத டாகூர் அவர்கள் நமது தேசத்தின் சங்கீத வித்தையை விருத்தியாக்க வேண்டிப் பொழுதையும் பொருளையும் செலவழித்துப் பல வித சங்கீதபாடசாலைகளை வைத்துப் பற்பல புத்தகங்களைப் பதிப்பித்துவந்ததில் சிலவற்றை நோக்கியும், பம்பாய் இராஜதானியைச் சார்ந்த புனாவில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கான ஸமாஜத்தின் கௌரவ காரியதரிசியாகவிருக்கும் ஸ்ரீபலவந்து திம்புக் என்பவரால் இத்தேசத்து சங்கீத விஷயமாக 1879 ஹு நவம்பர்மீ தியாஸபிஸ்ட் என்னும் சஞ்சிகையில் இங்க்லிஷ் பாஷையில் எழுதியிருப்பதை நோக்கியும், பின்னும் சங்கீதரத்நாகரம், சங்கீத சர்வார்த்த சாரசங்கிரஹம், இராக தர்பணம், தாளமஞ்சரி, வைணிகராகவர்த்தனி, ஸ்வரமஞ்சரி முதலான நூல்களை நோக்கியும் எனது சக்தி புத்திக்குத் தக்கபடி இத்தேசத்தின் சங்கீதத்தின் சரித்திரத்தைச் சுருக்கமாக இந்த மஹாசபையில் பிரசங்கஞ்செய்யத் துணிகின்றேன். வித்துவான்கள் குறைகளை நீக்கிக் குணத்தை நாட பிரார்த்திக்கின்றேன்.

## சங்கீதத்தின் ஆதிஸ்திதி.

இந்தப் பிரபஞ்சாதி அண்டபிண்ட சராசரங்களிற் பூரணமாக விற்றிருக்கும் ஸ்ரீ பரபிரம்மம் தனது இச்சையினால் ஒலிவடிவான தன் சுவரூபத்தை சப்த பிரம்மமாக ஆகாயத்தில் ஜனிப்பித்து, சதுர்முகனுக்கு உபதேசித்தருளினார். அந்த சப்த ஸ்வரூபமானது வர்ணாத்மக சப்தம் என்றும், துவனியாத்மக சப்தம் என்றும் இரண்டு பிரிவுகளாக விருந்தது. வர்ணாத்மக சப்தம் என்றால்—அகாராதி எழுத்துக் குறிகளாலாகிய வேதவேதாங்கோபநிஷத்தாதி சாஸ்திரபுராண இதிகாஸ காவிய நாடக அலங்காராதிகளாம். துவனியாத்மக சப்தமெனில்—ஓசையைத் தருகிற வீணை, வேணு, மரி, சங்கு, காஞ்சியம், முரசு, துந்துபி, மிருதங்காதி அநேக வாத்தியங்களினு லுண்டாகும் சப்தங்களாம். அந்தச் சதுர்முக

ளுனவர் இந்தச் சப்த பிரம்மத்துக்கு அதிஷ்டான தேவதை யாகியும், **கச்சபி** என்னும் மஹாவீணையை சதா கைக்கொண் டிருக்கும் கலைமடந்தையாகிய **ஸரஸ்வதியைத்** தனது மனோ பீஷ்டத்தின்படி சிருஷ்டித்தும், தமது பேசுங் கருவியாகிய "ஜிஹ்வா" என்னும் நாவில் வீற்றிருக்கச்செய்தும், **மஹாதே வருக்கும்** மஹா ரிஷியாகிய **நாரதருக்கும்** உபதேசித்தும், அந்த நாரத மஹரிஷியை **"மஹதி"** என்னும் வீணையைக் கொண்டு சுரர்வாழும் விண்ணுலகங்களுக்குப் போய் சாம வேதத்தின் உபவேதமாகிய **காந்தர்வ** வேதத்தைக் கொண்டு பிரகடனம் செய்ய அனுப்பினர். அப்போது ஸ்ரீ மஹா தேவர்: இந்தப் பிரபஞ்சத்தி லிருக்கும் ஆன்மகோடிகள் ஆனந்தப்பட் டுய்யும்படி சாமவேதத்தின் உபவேதமென்று சொல்லப்படும் காந்தர்வ வேதத்தி லிருந்த சிக்குகளைக் களைந்தும், அதை பாவ இராக தாளங்களுடன் பிரகாசிக்கும் நிருத்த கீத வாத்தியங்களாகிய முப்பொருளானந்தத்திற்கு பரத சாஸ்திரம் என்னும் பெயரிட்டும், தாமும் நடித்து நடன சபா நாயகராகி பிரகாசித்தார்; அப்போது அந்தப் பரத சாஸ்திரத்தில் சிருங்கார, வீர, கருண, அத்புத, ஹாஸ்ய, பயானக, பீபத்ஸ, ரௌத்திர, சாந்தம் என்னும் நவரச பாவாபிநயங்களுக்கும் யோக்கியமானபிரஸாரணம், குஞ்சிதம், ரேசிதம், புங்கிதம், ஆவேஷ்டிதம், பிரேரிதம், உத்வேஷ்டி தம், வியாவிருத்தி, சங்கேதம், சின்னம், பதார்த்தடீகா என் னும் துவாதச ஹஸ்த பிராணத்மகங்களுடனும்; **சம்யுதம்**, என்றும் **அசம்யுதம்** என்றும் சொல்லும் இரண்டு விதமான ஹஸ்தங்களில், அசம்யுத பாகத்தைச் சார்ந்த பதாகம், திரிப தாகம், அர்த்த பிரதாகம், கர்தரீமுகம், மயூரம், அர்த்தசந்தி ரம், அராளம், சுகதுண்டம், முஷ்டி, சிகரம், கபித்தம், கட காமுகம், ஆசி, சந்திரகளை, பத்மகோஶம், சர்ப்ப ஶீர்ஷம், மிருகஶீர்ஷம், சிங்கமுகம், லாங்கூலம், கோலபத்துமம், சது ரம், பிரமரம், ஹம்ஸாஸியம், ஹம்ஸபக்ஷம், சந்தமிஸம், முகு ளம், தாம்பிரசூடம், திரிசூலம் என்னும் இருபத்தெட்டு ஹஸ்தபேதங்களுடனும்; சம்யுத பாகத்தைச்சார்ந்த அஞ்சலி

கபோதம், கர்கடம், சுவஸ்திகம், டோளம், புஷ்பபுடம், உத்சங்கம், சிவலிங்கம், கடகாவர்த்தானம், கர்திரிசுவஸ்திகம் சகடம், சங்கம், சக்கிரம், சம்புடம், பாஸம், கீலகம், மத்ஸ்யம், கூர்மம், வராஹம், கருடம், சாகபத்மம், கட்டுவா, பேரண்டம், அவஹித்தியம் என்னும் இருபத்துநான்கு பேதங்களுடனும்; புஷ்பபுடாதி பதினாறுவித முத்திரிகா ஹஸ்தங்களுடனும், உத்திவிருத்தாதி இருபது முத்திரிகா ஹஸ்தங்களா லுண்டான 6 ஹஸ்த சேஷ்டைகளுடனும்; சமம், உத்வாஹிதம்,அதோமுகம், ஆளோலிதம், துதம், கம்பிதம், பராவிருத்தம், உச்சிப்தம், பரிவாஹிதம் என்னும் ஒன்பது வித சிரோ பேதங்களுடனும்; முகம், புருவம் முதலான வின்னியாஸங்களுடனும் ; சமம், ஆலோகிதம், சாச்சிபிரா லோகிதம், நிமீலிதம், உல்லோகிதம், அநுவிர்த்தம், அவலோகிதம் என்னும் எட்டு திருஷ்டி பேதங்களுடனும், சந்தரி, திரஸ்கஷி, பிரகம்பித, பரிவர்த்தினி என்னும் நான்கு கண்ட பேதங்களுடனுங் கூடிய அங்காபிநயங்கள் தமது சொந்த அங்க விலாசங்களினால் ஏற்படுத்திக் கொண்டு ஸ-ரி-க-ம-ப-த என்னும் ஷாடவஸ்வரமும், ச-ரி-க-ம-ப என்னும் அவுடவ சுவரமும், ஸ-ரி-க-ம என்னும் சுவநந்தஸ்வரமும், ச-ரி-க என்னும் சுவாமிகஸ்வரமும், ஸ-ரி என்னும் சாதிகஸ்வரமும், ஸ என்னும் அர்ச்சிகஸ்வரமும், ஸ-ரிக-ம-ப-த-நி என்னும் சாதிகஸ்வரமும், ஸ-ரி என்னும் சாதிகஸ்வரமும், ஸ என்னும் அர்ச்சிகஸ்வரமும், ஸ-ரிக-ம-ப-த-நி என்னும் சம்பூரண ஸ்வரத்துடனும் கூடி, துவாதசபிராண யுக்தமான, அநந்த இராகங்களுடனும், ச—ரி—க—ம—ப—த—நி—ஸ, ரி—க—ம—ப—த—நி—ஸ, க—ம—ப—த—நி—ஸ, ம—க த—நி—ஸ, ப—த—நி—ஸ—த—நி—ஸ, நி—ஸ—ஸ, என்னும் வாதி ஸ்வரங்களுடனும், ச—நி—த—ப—ம—க—ரி —ச, நி—த—ப—ம—க—ரி—ஸ, நி—ஸ—ஸ என்னும்— சம்வாதி ஸ்வரங்களுடனும், ஸ—மம—க—ரி—ச—ரி—க— ம, ரிப, ப—ம—க, ரி—க—ம—ப, க—த்த—ப—மக—ம— —ப—த, ம—ந்நி—த—ப, ம—ப—த—நிப—ஸ்ஸ—நி—த,

ப—த—நி—ஸ, என்னும் விவாதிஸ்வரங்களுடனும், ஸ—ரி—க, ரி—க—மா, க—ம—பா, ம—ப—தா, ப—த—நி, த—நி—ஸா, ஸ—நி—தா, நி-த-பா, த-ப—மா, ப—ம—கா, ம—க-ரி, க-ரி-ஸ, என்னும் அநுவாதிஸ்வரங்களுடனும், பிரம்ம க்ஷத்திரிய வைஶ்ய சூத்திர, சங்கீரண ஜாதிபேதங்களுடன் கூடிய பைரவி, பூபாளம், ஸ்ரீராகம், பலமஞ்சரி, வசந்தம், மாளவி, பங்காளம், நாட்டை முதலான புருஷராகங்களுடனும்;—தேவக்கிரியை, மேகரஞ்சினி, குருஞ்சி, பிலஹரி, மலஹரி, பாண்டி, அந்தோளி, பல்லாதி, சாகுளி, தேசி, மகாரி, லலிதா, இராமகிரியை, வராளி, கவுளம், குண்டகிரியை, கூர்ச்சரி, மவுலி, கல்லியாணி, ஆஹரி, சாவேரி, கானடா, காம்போதி, சங்கராபரணம் என்னும் ஸ்திரீ ராகங்களுடனும் கூடியும், ஆறுவித அலங்காரங்களுடனும், ஷட்ஜகிராம, மத்தியகிராம, காந்தாரகிராம முதலான கிராம திரியங்களுடனும், ஸ—ரி—க—ம—ப—த—நி, நி—ஸ—ரி—க-ம—ப—த, த—நி-ஸ—ரி—க—ம—ப, ப—த—நி—ஸ—ரி—க—ம, ம—ப—த—நி—ஸ—ரி—கா, க—ம—ப—நி—ஸ—ரி,—ரிக—ம—ப—த—நி—ஸ என்னும் இம்மாதரியான மூன்றுவித கிராமங்களுக்கும், 21 மூர்ச்சனைகளுடனும், தீவரா, குமுத்துவதி, மந்தா, சாரதோவதி, தயாவதி, ரஞ்சநி, ரக்தி, நிகாத்திரீ, கிரோதா. வஜ்ரிகா, பிரசாரணி, மீராதா, மார்ஜனி, க்ஷிதி, ரக்தா, சந்தீப, ஹாலாபி, மதந்தி, ரோஹிநி, ரம்ய, உககிர, மக்ஷாபினி என்னும் 22 சுருதிகளுடனும், 49 தாளபேதங்களுடனும்; ஆரோஹம், அவரோஹம், டாலு, ஸ்புரிதம், கம்பித, அஹதஹ-பிரதியஹதஹ, திருபுஹ ஆந்திரோலா, மூர்ச்சித என்னும் தசவித கமகங்களுடனும், ஐந்துடாயி, கிரஹாம்ஸம், வியாப்தி, சாலனமூர்த்தக என்னும் நான்குவிதபேத சுவரங்களுடனும், சுவர பிரஸ்தாரபேதங்களுக்கு முக்கியகாரணமான ஸ—ரி—க—ம—ப—த—நி என்னும் ஏழு சுத்தஸ்வரங்களுடனும் பகுதி - விகுதிகளால் உண்டாகும் 16 சுவர சம்யோகங்களினாலே அநேக விநோதமான மார்க்கங்களுக்கும், சப்த உத்பத்திக்கும் கார

ணங்களான ஸ்தானத்தைக் காட்டும்படியான சமிக்கா சூத்தி ரங்களைச்சார்ந்த துருவம்-மட்டியம்-ரூபகம், ஜம்பை-திரிபு டை - அடதாளம்-ஏகதாளம் முதலான ஸப்த தாளங்களில் சதுரஸ்ரம், திஸ்ரம் - மிஸ்ரம் - கண்டம், சங்கீரணம் என் னும் ஜாதி பேதங்களுடனும், காலம் - மார்க்கம் - கிரியை - அங்கம், கிரஹம்-ஜாதி-லயம்-கணம், யதி-பிரஸ்தாரம் என் னும் தசதாள பிராணங்களுடனும் கூடிய 65,535 தாள பேதங்களுடனும் கூடிய பேரி-மிருதங்காதி வாத்தியங்களை துவனிக்குக் காரணங்களான அகாராதி 16ஸ்வர ஸம்யோகத் தாக்குப் பொருந்திய தத்தித் தோண்ணம் - கிடதக - த கிண - தரிகும்ஜம் - ஹம்மில - மென்னும் ஸப்த மாத்திரை களுடன் தசாக்ஷர தச - அக்ஷரங்களுடனும் வர்ணாத்மக ஸப்தபிரம்ம வேதாங்க வியாகரணத்திற்கு ஆதி காரணமான அ, இ, உண், ரு, (ஐ) ல் என்றாதி பதினான்கு சூத்திரங்களுட னும் உத்தாயுத்த முப்பத்தைந்து சந்தஸ்களுடனும் சமுத் திரத்துக்கு ஸ்வரூபதரிசிகமான மகண - யகண - ரகண - ஸகண - தகண - ஜகண - பகண - சகண - என்ற கணங்களு டன் கூடிய சூத்திரத்தைத் தமது கையிலேந்திய டமரு என் னும் வாத்தியத்தினால் உண்டாக்கியும் முன்சொன்ன சூத்தி ரார்த்தங்களை விசதமாக்கி அநேக கிரந்தங்களை யுண்டாக்கி யும் சாரங்கி மஹரிஷிக்கு உபதேசஞ் செய்தருளினார்.

இது நிற்க, தேவரிஷியாகிய நாரதர் காந்தர்வ வேதத் தைத் தமது பிரியமான "மஹதி" என்னும் வீணையையேந்தி மஹாவிஷ்ணுவுக்குச் சந்தோஷ முண்டாகும்படி வாசித் துக்கொண்டு அதல, விதல, சுதல, மஹாதல, பாதாளாதி பதினான்கு லோகங்களிலும் சென்று சஞ்சரித்தும், இந்திராதி திக்குப் பாலகர்களுக்கும் ஞானரசத்தை யூட்டுகையில், தும்பு ருவரும் சேர்ந்து அவரது பிரியமான களாவதி என்னும் வீணையைக்கொண்டு, காந்தர்வர் முதலானவர்களுக்கு கான ரசத்தையூட்ட, விசுவாவசு என்னும் காந்தர்வரும் சேர்ந்து தமது பிரியமான புருஹூதி என்னும் வீணையைக்கொண்டு

ஹாஹா-ஹூஹூ, சித்திரசேனர், முதலான காந்தர்வர்களும் அரம்பை, ஊர்வசி, மேனகை முதலான அப்ஸரஸ்திரீகளும் கின்னரர், கிம்புருஷர் முதலான தேவர்களும், ஜந்திரகாந்திர வாத்தியங்களை அப்பியஸித்து ஆநந்த மடைந்தார்கள். பிறகு நாரதர் பாதாள லோகமாகிய நாகலோகத்துக்குப் போய், நாகராஜர்களும், ஆதிசேஷரும் பிரமிக்கும்படியாக மஹதி என்னும் வீணையை வாசிக்க அந்த நாகர்கள் பேசும்படியான வரத்தைப் பெற்றிராமையால் அவர்களது "உளம்" சப்தத்துக்கு தக்கபடி, ஊதுகுழலாகிய நாகசுர மென்னும் துளைக்கருவிகளைத் தயார்செய்து போதித்து ஆநந்தமுய்யும் படிசெய்து, மறுபடியும் பிரபஞ்சமாகிய இந்த உலகத்திற்கு வர, இவ்விடத்தில் ஸ்ரீ மஹாதேவரிடம் உபதேசம் பெற்ற சாரங்கி தேவமஹரிஷியானவர் சங்கிதத்துக்கு அநேக இலக்கிய இலக்கணங்களை யுண்டாக்கி, பிருசாசுவாதி சீடர்களுக்குப் போதித்துவந்தார். இதைக்கண்டு, நாரதமஹரிஷியானவர் ஆனந்தமடைந்து, இனி சங்கீதம் இந்த அண்ட புவனங்களில் சவிஸ்தாரமாகப் பரவுவதற்குத் தடையில்லை யென்று எண்ணி தேவலோகத்துக்கு எழுந்தருளித் தமது மஹதி என்னும் வீணையால் மஹாவிஷ்ணுவைத் துதித்துக்கொண்டாடினர்.

## பூர்வசங்கீத வித்வான்கள்.

இவ்விதமாக வந்த இந்தச் சங்கீதவித்தையானது பல மஹாத்துமாக்களால் பலவிதகிரந்தங்களால் பிரபலமாயிற்று. அப்படி இந்தச்சங்கிதத்தை ஆதியில் விருத்தியாக்கிய மஹாத்துமாக்கள் யாவரெனில், மஹாதேவர், நந்திகேசுவரர், சசிதேவர், நாரதர், தத்திலர், கோஹளர், பிருஹஸ்வர், மதங்கர், சுக்கிரர், கௌதமர், பரதோபாத்தியாயர், காலவர், யாசியபர், ஆதிசேஷர், காத்தியாயனர், ஆஞ்சநேயர், ஜைமினி, இராவணர், அர்ஜுனர், அச்சுதராஜர், தாளகலாவிலாச சங்கீதவித்தியா விநோத சதுரசபாவிலாச விருத்தர், சூடாமணி, லக்ஷமஞ்சரீகாரர், ஸோமநாதர், வித்தியாசவுஸ்பாகாரர், ஸ்ரீ

மூர்த்தி, சதுரங்கவர்த்திகர், கீதார்த்தசங்கிரஹகாரர், சர்வமத்தீபிகிகாரர், அந்திரகவி, தத்தநாதர் ஆகிய 32 பாத ஆசாரியர் பல இலக்ஷிய இலக்ஷணகிரந்தங்களை இயற்றினார்கள்.

இனிச்சங்கீதத்திற்கு ஆதாரமான சப்தம் அல்லது நாதத்தைப்பற்றி விசாரிப்போம்.

𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑍋𑌯𑌂 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑍇𑌰𑌯𑌤𑍇 𑌮𑌨𑌃।
𑌦𑍇𑌹𑌸𑍍𑌥𑌂 𑌵𑌹𑍍𑌨𑌿𑌮𑌾𑌹𑌨𑍍𑌤𑌿 𑌸 𑌪𑍍𑌰𑍇𑌰𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌮𑍍॥

(என்னும் சுலோகத்தினால்) தன்னால் விசாரிக்கலான இந்த ஆத்மாவானது, மனதை உத்போதிக்கும், அந்த மனது சரீரத்திலிருக்கும் அக்கினியைத் தாக்கும், அந்த அக்கினி வாயுவை பிரேரேபிக்கும், ஆக—ஆத்மா, மனது, அக்கினி, வாயு, கூடிய நான்கும் நாதம் ஜனிப்பிப்பதற்குக் காரணமென்றும்

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸𑍋𑌽𑌥 𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌪𑌥𑍇 𑌚𑌰𑌨𑍍-
𑌨𑌾𑌭𑌿𑌹𑍃𑌤𑍍𑌕𑌣𑍍𑌠𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌸𑍍𑌯𑍇𑌷𑍍𑌵𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 𑌧𑍍𑌵𑌨𑌿𑌮𑍍॥

என்னும் சுலோகத்தினால் — பிரம்ம கிரந்தியினிடமிருக்கும் அந்த நாதமானது ஊர்த்துவ முகமாக மேல்நோக்கிப்போய் வருகிற கிரமத்தினால், நாபி, ஹிருதயம், கண்டம், மூர்த்தனம், ஆசத்தியத்தில் குரதிரமம், என்னும் ஐந்துபெயர்களைக் கொண்டிருக்கும் என்று சொல்லியிருந்த போதிலும் சிக்ஷா என்னும் கிரந்தத்தில்

𑌆𑌤𑍍𑌮𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑌮𑍇𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌮𑌨𑍋 𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌯𑌾। 𑌮𑌨𑌃 𑌕𑌾𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌮𑌾𑌹𑌨𑍍𑌤𑌿 𑌸 𑌪𑍍𑌰𑍇𑌰𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌮𑍍 ॥௧॥

𑌮𑌾𑌰𑍁𑌤𑌸𑍍𑌤𑍂𑌰𑌸𑌿 𑌚𑌰𑌨𑍍 𑌮𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌜𑌨𑌯𑌤𑌿 𑌸𑍍𑌵𑌰𑌮𑍍 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃𑌸𑌵𑌨𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍 ॥௨॥

𑌕𑌣𑍍𑌠𑍇 𑌮𑌾𑌧𑍍𑌯𑌨𑍍𑌦𑌿𑌨𑌯𑍁𑌗𑌂 𑌮𑌧𑍍𑌯𑌮𑌂 𑌤𑍍𑌰𑍈𑌷𑍍𑌟𑍁𑌭𑌾𑌨𑍁𑌗𑌮𑍍 𑌤𑌾𑌰𑌂 𑌤𑌾𑌰𑍍𑌤𑍀𑌯𑌸𑌵𑌨𑌂 𑌶𑍀𑌰𑍍𑌷𑌣𑍍𑌯𑌂 𑌜𑌾𑌗𑌤𑌾𑌨𑍁𑌗𑌮𑍍॥௩॥

𑌸𑍋𑌦𑍀𑌰𑍍𑌣𑍋 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑍍𑌯𑌭𑌿𑌹𑌤𑍋 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌪𑌦𑍍𑌯 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 𑌵𑌰𑍍𑌣𑌾𑌞𑍍𑌜𑌨𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 𑌶𑌿𑌕𑍍𑌷𑌾॥

என்னும் வாக்கியங்களினால் "ஆத்மாவானது தனக்குச்சுபாவமாக விருக்கும் இயற்கை ஞானத்தினால் அதற்கு வேண்டிய விஷயங்களைப்பற்றிப் பேசத்தொடங்கி [தனது காரிய கர்த்தாவாகிய] மனதைத் தூண்டுகிறது; அப்போது மனதானது தேகாக்கினியை யெழுப்ப, அந்த அக்கினியானது தேகவாயுவைப் பிறிட்டெழச் செய்ய, அந்தவாயுவானது குய்யத்திலிருந்து குழிக்குத்தாண்டிப் பிறகு மார்பு முதலான பாகங்களிற் சென்று மேல் நோக்க அப்போது மந்தார சப்தமுண்டாகி முதலில் புலி உறுமுவதைப் போலிருந்து, பிறகு வாயைத் திறக்க நாதம் வெளியில் வருகிறதென்று சொல்லியிருக்கிறது. மேலும் மந்திர சாஸ்திரத்தில்

நகாரம் ப்ராணநாமானம் தகாரமனலம் விது: ஜாத:
ப்ராணாக்னிஸம்யோகாத் தேன நாதோபிதீயதே ||

நாதம் என்னும் இரண்டு எழுத்துக்களில். ந - என்னும் எழுத்து பிராணமென்றும், த - என்னும எழுத்து அக்கினி-என்றும் அதாவது பிராணனும் அக்கினியும் கூடிய விடத்து நாதமுண்டாகிறது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நாதத்திற்கு,

வ்யவஹாரே த்வஸௌ த்ரேதா ஹ்ருதி மந்த்ரோபிதீய
தே | கண்டே மத்யோ மூர்த்னி தாரோ த்விகுணஸ்சோத்தரோத்
தர: ||

என்னும் சுலோகத்தினால் ஹிருதயத்திலிருந்து (இடைவழியாக) மந்திரமும் கண்டத்திலிருந்து (பிங்களவழியாக) மத்தியமும் - மூர்த்தினியிலிருந்து [சுழிமுனை வழியாக] தாரகமுமாக ஜனித்ததாகக்கொண்டு ஆரியர் தம் மக்களுக்கு சுவரக்கியான முண்டாகும்படி காலையில், புலி உறுமுவதைப்போன்ற மந்திர சப்தத்தோடு கூடிய பாடங்களையும். மத்தியான காலங்களில் சக்கிரவாக பக்ஷியின் கண்டத்தைப்போன்ற மையநிலையான மத்திய கண்டத்திற் பாடத்தக்க பாடங்களையும், மற்ற காலங்களிலெல்லாம் மயில் கண்ட சப்தத்தை யொத்த தாரகமாகிய பெரிய கண்டத்தில் பாடக்கூடிய பாடங்களையும்

கற்பித்துப் பழக்கிவைத்தார்கள். இந்த மந்தர, மத்திய, தாரம் என்று சொல்லும்படியான மூன்றுவித சப்த பேதங்களுக்கு உதாத்த, அநுதாத்த, ஸ்புரிதமென்று வழங்குவதுமுண்டு. இம்மூன்றுவித சப்தபேதங்களாகிய உதாத்தத்துக்கு நீ மா என்னும் சுவரங்களும், அநுதாத்தத்துக்கு ரீ-ஷா என்னும் சுவரங்களும், ஸ்புரிதத்துக்கு ஸ-ம-ப-என்னும் சுவரங்களும் பொருந்தியவைகளாகக்கொண்டு ஆரியர் ஆதியில் சாமவேதத்தையும் பாடி யாகங்கள் செய்யும்போது உத்காதா என்னும் ஆசாரியர்களைக்கொண்டு பாடிவரும்படி செய்தார்கள். இப்படிச் செய்வதற்குக் காரணம் ஆதிகாலத்து ஆரியர்கள் மஹா புத்திமான்களானபடியினால், அவர்களுக்குப் பரமேசுவரரால் இயற்கையாக அமைக்கப்பெற்ற மந்திர, மத்திய, தாரகம் என்னும் ஸப்தபோகங்களுக்கு அவர்களுக்கு வெளியே (அதாவது ஸ்தூல சூக்ஷ்ம தேகாதிகளுக்குப்) புறம்பான பிரபஞ்சத்தில் இனமான சப்தங்கள் மயில், ரிஷபம், ஆடு, கிரௌஞ்சம் அல்லது சக்கிரவாக பக்ஷி, குயில், குதிரை, யானையாகிய பக்ஷி மிருகங்களின் சப்தங்களுக்குப் பொருந்தி யிருப்பதைக் கூர்மையான புத்தியினாலும், கேள்வியினாலும் அறிந்து இந்த ஏழு சப்தங்களை பிரபஞ்ச பிராண கோடிகளின் சப்தங்களுக்கெல்லாம் பிரதானமானவைகளாகவும், மற்றெவ்வித சப்தங்களும் இந்த ஏழுவித சப்தங்களுக்குள் அடக்கமானவைகளாகவும், இந்த சப்த சுவரங்களை மானவஜாதியாருடைய சப்தத்துக்குப் பொருந்தியவைகளாகவும், இந்த ஏழு சுவரங்கள், இடம், காலம், குணம், முதலானதுகளுக்கும் பொருந்தியவைகளாகவும் கொண்டு வழங்கி வருகிறார்கள். அவற்றின் விவரமாவது,

சுவரம் என்னும் சப்தத்திற்குப் பொருளென்னவெனில் ஸ்வதோ ரஞ்ஜயதி ஸ்வரம், ஸ்வ சொந்தமாகிய தம்மைத்தானே ரஞ்சிக்கச்செய்வது என்று பொருளாகிறது, இந்தச்சுவரங்கள்,

நாஸா கண்டமுரஸ் தாலு ஜிஹ்வாம் தந்தாம்ஶ்ச ஸம்ஸ்ப்ருஶ்ய
ஷட்ஜாயதே யஸ்மாத் தஸ்மாத் ஷட்ஜ இதீரித: ॥

என்றுதி சுலோகங்களினால், மூக்கு, கண்டம், வக்ஷஸ்தலம், தவடை, நாக்கு, பல் முதாதிகளில் ஜனிக்கின்றன. தமிழ்தேசத்தார் இவைகளையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று சொல்லுவார்கள்.

TO

Sreeman

T. M. Narainasawmy Naidu Garu,

Head Quarter Inspector of Police,

COIMBATORE.

This Work

IS INSCRIBED IN REMEMBRANCE

OF

HIS KIND ENCOURAGEMENT

OF

Aryan Music,

BY HIS AFFECTIONATE FRIEND,

S. P. NARASIMMALU NAIDU,

*EDITOR.*

அதாவது.

𑌸—ஷட்ஜமம், மயில் சப்தத்தைப் போலிருத்தல்.
𑌰𑌿—ரி, ரிஷபம், ரிஷப சப்தத்தைப் போலிருத்தல்.
𑌗—க, காந்தாரம் ஆடு சத்துவதைப் போலிருத்தல்.
𑌮—ம, மத்தியமம் கிரவுஞ்சி அல்லது கொக்கின் சப்தம்.
𑌪—ப, பஞ்சமம் குயில் கூவலைப் போலிருத்தல்.
𑌧—த, தைவதம் குதிரை அல்லது தவளை சப்தம்.
𑌨𑌿—நி, நிஷாதம் யானை சப்தத்தைப் போலிருத்தல்.

இந்த சுவரவிவரமும் அடியிற்கண்ட ஜாப்தாவினால் விவரமாக அறியலாம்.

| ஸம்ஸ்கிருத சுவரங்கள் | தமிழ் எழுத்துக்களில் | இதற்கு இணமான இங்கிலீஷ் சுவரங்கள் | ஸம்ஸ்கிருத ஸ்வர சப்தப்பெயர்கள். | இங்கிலீஷ் ஸ்வர சப்தப்பெயர்கள். | இந்த ஸ்வரங்களுக்கு இணமான பக்ஷி மிருகங்களின் தொனிகள் | சுவரங்களின்குணங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 𑌸 | ஸ | C | ஷட்ஜமம் | Do | மயில் கூவும் சப்தம் | வீரம், பயம், அற்புத குணமானது. |
| 𑌰𑌿 | ரி | D | ரிஷபம் | Re | ரிஷப சப்தம். | ஷை ஷை ஷை |
| 𑌗 | க | E | காந்தாரம் | Mi | வெள்ளாட்டு சப்தம். | பரிதாப குணம். |
| 𑌮 | ம | F | மத்தியமம் | Fa | கிரவுஞ்சி சப்தம். | அன்பு—ஹாசியம். |
| 𑌪 | ப | G | பஞ்சமம் | Sol | குயில் கூவல். | ஷை |
| 𑌧 | த | A | தைவதம் | La | குதிரை, தவளை. | அரவம், அறுவெறுப்பு. |
| 𑌨𑌿 | நி | B | நிஷாதம் | Si | யானை கூவும் சப்தம். | பச்சாத்தாபம். |

இந்த சப்த சுவரங்களில்

| | |
|---|---|
| ரி, க, ம, | என்பவை தேவ வம்சமாகவும் |
| ப, | பிதாள வம்சமாகவும் |
| ரி, த, | என்பவை ரிஷி வம்சமாகவும் |
| நி, | என்பது இராக்ஷஸ வம்சமாகவும் |
| ச, ம, ப, | என்பவை பிராமண ஜாதியாகவும் |
| ரி, த, | என்பவை க்ஷத்திரிய ஜாதியாகவும் |
| நி, க, | என்பவை வைசிய ஜாதியாகவும் |
| அந்த ரகாகழிலு | சூத்திர ஜாதியாகவும் கொண்டும் |
| ஸ, | என்பது தாம்பிரவர்ண முள்ளதாயும் |
| ரி, | என்பது மயூரகிரி வர்ணமுள்ளதாயும் |
| க, | என்பது தங்க வர்ணமுள்ளதாயும் |
| ம, | என்பது முல்லை மலர் வர்ணமுள்ளதாயும் |
| ப, | என்பது பஞ்ச வர்ணமுள்ளதாயும் |
| த, | என்பது மஞ்சள் வர்ணமுள்ளதாயும் |
| நி, | என்பது தூரச வர்ணமுள்ளதாயும் |

கொண்டும், பின்னும்

| | |
|---|---|
| ஸ, என்பது | ஜம்புத் துவீபத்திலும் |
| ரி, என்பது | சாகத்துவீபத்திலும் |
| க, என்பது | குசத்வீபத்தினும் |
| ம, என்பது | கிரவுஞ்சத்வீபத்திலும் |
| ப, என்பது | சால்மலித்வீபத்திலும் |
| த, என்பது | சுவேதத்வீபத்திலும் |
| நி, என்பது | புஷ்கரத்துவீபத்திலும் |

பிறந்தவைகளாகக் கொண்டும்

| | | |
|---|---|---|
| ஸ - என்னும் | சுரத்துக்கு | அக்கினியும் |
| ரி-என்னும் | சுரத்துக்கு | பிரம்மாவும் |
| க | ,, | சரஸ்வதியும் |
| ம | ,, | ஈசுவரனும் |
| ப | ,, | ஸ்ரீஹரியும் |
| த | ,, | விநாயகரும் |
| நி | ,, | பாஸ்கரரும் |

அதிதேவதைகளாக கொண்டும்,

மேலும்;

| | |
|---|---|
| ஸ, சுவரத்துக்கு | ஸ்தூல்தேகமும் |
| ரி- | சூக்ஷமதேகமும் |
| க- | ஸ்தூலதேகமும் |
| ம- | உயர்ந்த தேகமும் |
| ப- | சம்புஷ்டி தேகமும் |
| த- | உயர்ந்த தேகமும் |
| நி- | அதிஸ்தூல தேகமும் |

கொண்டும்;

| | |
|---|---|
| ச-சுரத்துக்கு | 80-வருஷமும் |
| ரி- | 70-வருஷமும் |
| க- | [illegible]0-வருஷமும் |
| ம- | 40-வருஷமும் |
| ப- | 30-வருஷமும் |
| த- | 20-வருஷமும் |
| நி- | 10-வருஷமும் |

தேவதா வருஷங்களாகக் கொண்டும்;

| | |
|---|---|
| சகரம் | அநுஷ்டுப்பையும் |
| ரி- | காயத்திரியையும் |
| க- | திருஷ்டுப்பையும் |
| ம- | பஹுரதியையும் |
| ப- | பங்தியையும் |
| த- | உஷ்டிணையையும் |
| நி- | ஜகதியையும் |

சந்தஸ்களாய்க் கொண்டும்;

பின்னும் இந்த சுரங்களுக்கு வாசாயோக்கியமான விருக்ஷங்கள், நக்ஷத்திரங்கள், உணவு, உடுப்பு, லேபனம், புஷ்பம், பூஷணம், ஆயுதம், வாஹனம், மனைவிகள் முதலானதுகளை வெகு புத்திசாதுரியமாகவும் அற்புத விநோதமாகவும் கற்பிக்கப்பட்டு வழங்கி வரப்பட்டன.

இம்மட்டோ! ஆதிகாலத்திலிருந்த நமது தேசத்தின் சங்கீத வித்துவான்களுடைய புத்தி சாதுரியத்தைக் காட்ட இங்கு ஒரு திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறேன்.

அதாவது.

சரவீணை அல்லது ஏகதார்க் கருவியைப் போன்ற கட்டையைக்கொண்டு, அந்தக்கட்டையின் மேல்பாக இடைவெளியை 44 பாக அளவாக வகுத்து மெட்டு மேடைகளை யேற்படுத்தி, அதன்பேரில் தாக்கும்படியாகத் தந்தி கம்பியைக் கட்டி அதை மீட்டினால் அது ஒருவித நாதத்தை யுண்டாக்கும். அப்படி நாதம் பிறிக்கொண் டெழும்போது முன் சொன்ன மெட்டுகளில் விரல் நுனியைக்கொண்டு மெல்லென அழுத்தினால் அவைகள் முறையே ஸப்த சுவரங்களின் நாதத்தைப் பின் வருகிறபடி யுண்டாக்குமாம்.

எப்படியெனில்.

ஷை கருவி கட்டையின் 44-வது மெட்டில்
அழுத்த ஸா என்னும் சுவரமும், 40-வது மெட்டில்
அழுத்த ரி என்னும் சுவரமும், 37-வது மெட்டில்
அழுத்த க என்னும் சுவரமும், 35-வது மெட்டில்
அழுத்த ம என்னும் சுவரமும், 31 வது மெட்டில்
அழுத்த ப என்னும் சுவரமும், 27-வது மெட்டில்
அழுத்த த என்னும் சுவரமும், 24-வது மெட்டில்

அழுத்த த-நி என்னும் சுவரமும், மறுபடியும் 20-வதுமெட்டில் அழுத்த ஸ என்னும் சுவரமும் உண்டாகுமாம். ஆனல் கடைசி ச-என்னும் ஸ்வரமானது முன் சொன்னதை விட இரண்டு மடங்கு அதிகமான சப்தத்தையுண்டாக்கும். இப்படி நமது முன்னோர்கள் இந்த கான சாஸ்திரத்தில் எவ்வளவு சிறந்தவர்களாக விருந்தார்கள் என்பதை இக்காலத்தில் இங்கிலீஷ் பிராணதத்துவ சாஸ்திரிகளின் சித்தாந்தத்துக்குப் பொருந்தி யிருக்கிற தென்பதைக் காட்டுவோம். அப்படிக் காட்டுவதற்கு இங்கிலீஷ் சுவரகமகங்களையும் கணக்கு முதலானதுகளையும் இதனடியில் காட்டுகிறோம்.

இங்கிலீஷ்சுவர கமக பிரகாரம்.

ஸ-ரி-க-ம-ப-த-நி-ஸ

C-D-E-F-G-A-B-C

1 $\frac{9}{8}$, $\frac{5}{4}$, $\frac{4}{3}$, $\frac{3}{2}$, $\frac{5}{3}$, $\frac{15}{8}$, 2

அதாவது 24—27,30,32,36,40,45,48.

மாத்திரை ஆகும்.

ஆனால் தந்திகளும் மெட்டுகளும் நீண்டு அகன்று இருக்கில்

ஸ-ரி-ஹ-ம-வ-ஜ-நி-ஸ

C-D-E-F-G-A-B-C

$1\frac{8}{9}, \frac{4}{5}, \frac{3}{4}, \frac{2}{3}, \frac{3}{5}, \frac{8}{15}, \frac{1}{2}$

அதாவது 180,160,144,135,120,168,96,90

ஆகும்; மேலும் இரண்டு இசைகளுக்கு மத்தியகாலம்

2), 16, 9, 15, 12, 12, 6, மாத்திரை ஆகும்.

மேலும் இந்த மத்திய காலத்தசையை 48-பாகங்களுக்குப் பிரித்துக் கணக்கிட்டுப் பார்க்கும்போது

ஸ-ரி-க-ம-ப-த-நி-ஸ

C-D-E-F-G-A-B-C

5.3,-4.16,-2-3,-3.9,-3.12,3.12,—3.12,1,5

அளவாகின்றது, இதைப் பின்னும் விவரமாக அறியவேண்டில் இந்த ஜாப்தாவில் காணலாம்.

| ஹிந்து சுவரங்கள் | இங்கிலீஷ் சுவரங்கள் | மதிப்பான மத்திய காலம் | சுருதிமாத்திரை |
|---|---|---|---|
| ஸ | C | 5.3 | ........4......... |
| ரி | D | 4.16 | ........3......... |
| க | E | 2.3 | ........2......... |
| ம | F | 3.9 | ........4......... |
| ப | G | 3.12 | ........3......... |
| த | A | 3.12 | ........3......... |
| நி | B | 3.12 | ........2......... |
| ஸ | C | 1.5 | ........0......... |

இதனால் ஆரியராகிய நமது முன்னோர் இந்தச்சுவரங்களை ஆதிகாலத்தில் எவ்வளவு திட்பநுட்பமாகவும், இயற்கை

ஞானத்துக்குப் பொருந்திய மாத்திரைக் கால அளவுகள் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். இப்படிக்கிருக்க இக்காலத்து சில சுதேச வாலிபர்கள் நமது தேசத்து சங்கீதத்தின் பெருமையை யறியாமல், போதுமான சுவரங்களற்ற இங்கிலீஷ் முதலான இராகங்களைக்கேட்டு ஆநந்தித்து அதை மேன்மைப்படுத்துகின்றனர். முதலாவது இங்கிலீஷ் பாட்டுகளுக்குப் போதுமான சுவரங்கள் கிடையாதென்பதற்குத் திருஷ்டாந்தமாக நமது தேசத்து கல்யாணி ராகத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்போம். அதாவது—கல்யாணி இராகத்துக்கு,

ஸா-ரீ,—கா,—மா,—பா,—தா,—நீ,—ஸா,—ச,
C — D — E — F — G — A — B — C

என்னும் இங்கிலீஷ் ஸ்வரங்கள் வேண்டியிருக்கின்றன. அப்படிக்கிருக்க, கல்யாணி முதலான நமது தேசத்து இராகங்களை ஐரோபாதேசத்து இங்கிலீஷ் பியானு முதலான வாத்தியக் கருவிகளில் வாசிப்பதெப்படி?

## இனி நமது தேசத்தில் விசேஷமாக வழங்கிவரும் சில இராகங்களின் ஆரோஹண அவரோஹண சுவரங்களாவன.

| புருஷராகங்கள் | ஆரோஹணம் | அவரோஹணம் |
|---|---|---|
| பைரவி | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| பூபாளம் | ஸரிகபதஸ | ஸதபகரிஸ |
| ஸ்ரீராகம் | ஸரிமபநிஸ | ஸநிபமகரிஸ |
| பலமஞ்சரி | ஸதமதஸ | ஸநிதபமகரிஸ |
| வசந்தம் | ஸரிகமதநிஸ | ஸநிதமகரிஸ |
| மாளவி | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| பங்காளம் | ஸரிகமபதநிஸ | ஸநிதபமஸ |
| நாட்டை | ஸரிகமபதநிஸ | ஸநிபமரிஸ |

பைரவியின் மனைவிகள்

| ஸ்திரீராகங்கள் | ஆரோஹணம் | அவரோஹணம் |
|---|---|---|
| தேவகிரியை | ஸரிகமநிஸ | சதமகரிஸ |

| | | |
|---|---|---|
| மேகரஞ்சி | ஷை | ஸநிமகரிஸ |
| குருஞ்சி | ஸரிகமபதனிஸ | ஸநித்மகரிஸ |

பூபாளத்தின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| பிலஹரி | ஸரிகபதஸ் | ஸநிதமரிஸ |
| மலஹரி | ஸரிமபதஸ | ஸதமமகரிஸ |
| பாண்டி | ஸரிபதஸ | பமகரிசநிதப |

ஸ்ரீராகத்தின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| அந்தோளி | ஸரிமபநிஸ | ஸநிபமகரிஸ |
| பல்லாதி | ஷை | ஸநிபமரிகரிஸ |
| சாஹானி | ஸகரிமபநிஸ | ஸநிபமரிஸ |

பலமஞ்சரியின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| தேசி | ஸரிமநிஸா | ஸநிதபமகரிஸ |
| முகாரி | ஸரிமபதஸா | ஷை |
| லலித | ஸரிகமபநிஸ | ஸநிதமகாரிஸ |

வசந்தாவின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| இராமகிரிமை | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| வராளி | ஷை | ஷை |
| கௌளி | ஸரிமபநிஸ | ஸரிபமரிகமரிஸா |

மாளவத்தின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| குண்டக்கிரியை | ஸரிமாகமபதஸா | ஸநிபாமகரிஸ |
| கூர்ஜரி | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| ஜபுளி | ஸரிகபதஸ | ஸநிதபகரி |

பங்காளத்தின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| கலியாணி | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| ஆஹரி | ஸரிகமபதரிஸ | ஷை |
| சாவேரி | ஸரிமபதஸா | ஸநிதபமகரிஸ |

நாட்டை ராகத்தின் மனைவிகள்

| | | |
|---|---|---|
| கண்டராகம் | ஸரிகமபதநிஸ | ஸநிதபமகரிஸ |
| காம்போதி | ஸரிகமபதஸ | ஷை |
| சங்கராபரணம் | ஸரிகமபதநிஸ | ஷை |

இந்த இராகங்களில்

காம்போதி, தன்னியாசி, சாவேரி இராகங்களைப் பண்டிகை முதலான சுபசந்தோஷ காலங்களிலும், ஆஹரி, கண்டா, நீலாம்பரி, புன்னாகவராளி, பியாகடை இராகங்களைத் துக்க காலங்களிலும்; நாட்டை ராகத்தை யுத்தகாலத்திலும்; காம்போதி, தன்னியாசி, ஆசாவேரி, இராகங்களை வசந்த காலத்திலும்; கலியாணி, காபி, கன்னடம், காம்போதி இராகங்களை இராக்காலங்களிலும், ஜாமத்தில் ஆஹரி இராகத்தையும்; விடியற்காலத்தில் இந்தோளம், இராமகளி, தேசாக்ஷரி, நாட்டை, பூபாள இராகங்களையும்; உச்சி காலத்தில் சாரங்கம, தேசாக்ஷரி, இராகங்களையும்; ஆஹரி, இந்தோளம், பூபாளம், இராமகிரியை, சாரங்கம் ஆகிய இராகங்களைத் தவிர மற்ற இராகங்களை யெந்தக் காலத்திலும் பாடலாமென்று நியமிக்கப்பட்டிருக்கிற தன்றியில் குரஞ்சி; பஞ்சிரம், சாதாரி, மருதம், செவ்வழி யென்றுதி இடங்களையும் தழுவிப்பாடவேண்டுமென்று விதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

மேலும், இந்த இராகங்களில் பைரவி பிராமண ஜாதியைச் சார்ந்து ஈசனை அதிஷ்டான தேவதையாக உடையது. ஸ்ரீராகம், அரச ஜாதியைச் சார்ந்தது; அது சரஸ்வதியை தேவதையாக உடையது. பலமஞ்சரி அரச ஜாதியைச் சார்ந்தது; லக்ஷ்மியை தேவதையாக உடையது. வசந்தம் வைசிய ஜாதியைச் சார்ந்தது; சூரியனை தேவதையாக உடையது. பாளவி வைசிய ஜாதியைச் சார்ந்தது, நாரதரை தேவதையாக உடையது. பங்காளம் சூத்திர ஜாதியைச் சார்ந்தது; விநாயகரை தேவதையாக உடையது. நாட்டை சூத்திர ஜாதியைச் சார்ந்தது, தும்புருவரை தேவதையாக உடையது. இந்த இராகங்களிலிருந்து பிரிந்த இராகங்கள் தேசத்துக்கும் காலத்துக்கும் தக்கபடி யநந்தம்.

## இனி தசவிதகமகங்களெவை யெனில்

| | | |
|---|---|---|
| 1 | ஆரோஹணம் | ச, ரி, க, ம, ப, த, நி, ச, |
| 2 | அவரோஹணம் | ச, நி, த, ப, ம, க, ரி, ச, |
| 3 | டாலு | ச, ப, ச, ம, ச, க, |
| 4 | ஸ்புரிதம் | சச ரிரி கக மம |
| 5 | கம்பிதம் | பா ப ப ப ப ப ஒரு ஸ்தானத்தில் நின்று தந்தியை யசைத்தல் |
| 6 | ஆஹதம் | ச ரிரி கக மம ப சச ரிரி கக மம |
| 7 | பிரதியாஹதம் | சச நிநி தத பப |
| 8 | திரிபுஷ்சம் | சசச ரிரிரி கக |
| 9 | அந்தோளம் | சரி பாப |
| 1 | மூர்ச்சனை | ச ரி க ம ப த நி |

இதுநிற்க:—தமிழ் தேசத்தில் பூரணபக்திமான்களாகச் சிறந்த முன்னோர்கள் ஆழ்வார்களாகவும், நாயன்மார்களாகவும்,பிரகாசித்து இந்தசப்த சுவரங்களை யாதாரமாகக்கொண்டே திவ்ய பிரபந்தாதிபாசுரங்களை யியற்றியிருக்கிறார்கள்.

எப்படியெனில்

ச—மிடற்றால் (குரலில்)...........பிறந்ததாகவும்
ரி—துத்தத்தால் (நாவில்) ...பிறந்ததாகவும்
க—கைக்கிளையால் (அண்ணத்தால்) ...பிறந்ததாகவும்
ம—உழையால் (சிரசினால்) ...பிறந்ததாகவும்
ப—இளியால் (நெற்றியினால்) ...பிறந்ததாகவும்
த—விளரியால (நெஞ்சில்) ...பிறந்ததாகவும்
நி—தாரத்தால் (மூக்கினால்) ...பிறந்ததாகவும்
கொண்டும்,

சகரத்துக்கு ஆ அ-வும்—ரி-க்கு-ஈ உம்—க-வுக்கு ஊ உம்—ம-க்கு ஏ எ-வும்—ப-க்கு ஐ யும்—த-க்கு ஓ ஒ-வும்-நி-க்கு ஔ-வும் பிராணாக்ஷரங்களாகக் கொண்டு வழங்கிவந்தார்கள்.

இந்தச் சுவரங்களாலுண்டாகும் இராகங்களைத் தாம் திருவாய்மலர்ந்தருளிய விசேஷமான காவியங்களில் அமைத்துக் கொண்டார்கள்.

எப்படி யெனில்

வெண்பாவுக்கு ...சங்கராபரணமும்
அகவலுக்கு ...தோடியும்
கலிப்பாவுக்கு ...பந்துவராளியும்
கலித்துறைக்கு ...பைரவியும்
தாழிசைக்கு ...தோடியும்
விருத்தத்திற்கு ...கலியாணி,காம்போதி,மத்தியமாவதியும்
உலாவுக்கு ...சவுராஷ்டிரமும்
தோடையத்துக்கு...நாட்டை சவுராஷ்டிரமும்
மங்களத்துக்கு ...கவுசிகமும்
தேவாரத்திற்கு ...பூபாளமும்
பிள்ளைக்கவிக்கு ...கேதாரமும்
பரணிக்கு ...கண்டாராகமும்

வழங்க விதிகள் ஏற்பட்டிருந்த போதிலும், வித்துவான்கள் தமது சக்திக்குத் தக்கபடி பாடிவருவது பிரத்தியக்ஷம். மேலும், தமிழ் நாட்டார் கைத்தொழில் ஐந்தில், எண்ணல், எழுதல், இலேக்கிள்ளல், பூக்கொய்தல், யாழ்வாசித்தல் என்று சொல்லியிருப்பதால், யாழ் வாசிப்பதை விசேஷமாகக் கொண்டிருந்ததாகத் தெரியவருகிறது. இந்த யாழ்களில், சகோடயாழ், மகரயாழ், பேரியாழ், செங்கோட்டியாழ் என்று பிரதான யாழ்களு மிருந்ததாகத் தோற்றுகின்றது. இந்த யாழ் நாதமன்றியில, தோள்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவிகளென நாதத்தை வகுத்து உபயோகப்படுத்தி வந்தார்கள். ஆரியர் வீணைகளில் பலபேதங்களை யுடையவர்களாக விருக்கினும், சரவீணை, ஸ்திரவீணை யென்னும் இரண்டு விசேஷ விதங்களாக வகுத்துக் கொண்டிருந்தார்கள். ஸ்திர வீணை யென்றால்—காந்தர்வ வேதத்தைச் சார்ந்த வேத சுருதி ஜாதிய சகல சுருதிகளையும் வீணையில் ஸ்திரப்படுத்தி, மானஸம், பம்பா முதலான தீர்த்தவிடங்களில் வைக்க அந்தவீணைக்குக் கேவலம் காற்று தாக்கிய உடனே அவைகளில் கம்பீரமாக

நாதம் ஜனித்து, அவ்விடங்களிற் சென்று பிரஹ்மத்தியானம் செய்யும் ருஷிகள் முனிகள் முதலான மஹாத்மாக்களுக்கு ஆநந்தத்தை மூட்டும். சரவீணை யென்பது மஹதி, ருத்திரவீணை முதலானதுகளைப் போல காலத்துக்கும் இடத்துக்கும் தக்கபடிச் சுருதிகளைக் கூட்டி வாசிக்கப்பட்டவைகளாம். இப்படிப்பட்ட வீணைகள் இக்காலத்தில் அபூர்வமாகிவிட்டன. பொதுப்பட வீணையானது சங்கீதத்துக்கு இலக்கண மென்று சொல்லப்படும். இந்த வாத்தியத்தில் யாதொரு சூதுகள் செய்வதற்குக் கூடா. இதில் இராகம் ஜனிப்பிக்கச் செய்வது மாத்திரமல்ல; அந்தந்த இராகங்கள் சமப்பட்டு நடக்க வேண்டிய தாள பேதங்களையும் மீட்டிக் காட்டலாம். ஆகவே வீணையானது மற்றக் கருவிகளிலும் சிறந்தது. மேலும்

ஶ்ருதிர் மாதா பிதா கீதா வாத்யஸ்ஸு ஸம்பாந்த
வாஸ் தாலஸ் ஸஹோதர: ப்ரோக்த: க்ஷேத்ரம் ஸம்ஸ்ருதி॥

என்றுதி சுலோகங்களினுல் பாடுபவர்களுக்கு சுருதி மாதாவாகவும், கீதம் பிதாவாகவும், தாளம் சஹோதரரைப் போன்றதென்றும் சொல்லியிருப்பதால் இனி தாள பேதங்களைப் பற்றி விசாரிப்போம்.

## தாளபேதம்.

தாளம் - (7) ஏழு வகைப்படும். அவையாவன :—துருவம், மட்டியம், உருபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம், என்பவைகளே. இவற்றுள் துருவத்திற்கு இலகு 1, குருக-1, துரிதம்-1, இதற்குச் சுரம்-சரிகம, கரிசரி, கரிசரி. கம—மட்டியத்திற்கு—இலகு-1, துரிதம்-1, இலகு-1, இதற்குச் சுரம் சரிகரி, சரி, கரி, கம:—உருபகத்திற்கு இலகு-1, துரிதம்-1, இதற்குச்சுரம்சரி, சரிகம,—சம்பைக்கு இலகு-1, அநுதுரிதம்-1,துரிதம்-1,இதற்குச்சுரம் ச,ரிக,சரிகரி,கமா:—திரிபுடைக்கு துரிதம் 3 அநுதுரிதம் 1 இதற்குச் சுரம் கரிக, சரிகம:—அடதாளத்திற்கு இலகு-1, துரிதம்-2, இலகு-1,

இதற்குச் சுரம் சரிகா, சாரிகா, மா, மா, ஏகதாளத்திற்கு, இலகு-1 இதற்குச் சுரம் சரிகம, சம்பைக்கு பிரம ஜாதி தவிர நான்கு ஜாதியுமுள. திரிபுடைக்கு மூன்று விராமமு மோராறு துரிதமுமானுலோ ரேகாதி, இலகு விருந்தாலேந்து சாதியுமுண்டு. மற்ற ஐந்து தாளங்கட்கு மைந்து சாதியு முண்டு. அவற்றை யவ்வவ் சாதியேகதானலகு அக்ஷரங்களா லறியுமாறு, பிரம்ம ஜாதியிலகுவிற்கு நான்கக்ஷரகாலம். அரச ஜாதியிலகுவிற்கு மூன்றக்ஷர காலம், ஆரக்ஷர காலமுமுண்டு. —வைசிய ஜாதியிலகுவிற் கேழக்ஷர காலம்—சூத்திர ஜாதி யிலகுவிற் கைந்தக்ஷர காலம். சங்கிரம ஜாதியிலகுவிற் கொல் பதக்ஷரகாலம்—எச்சாதியிலு மநுதுரித மோரக்ஷர காலமும் —துரித மிரண்டக்ஷர காலமுமாக ஏற்பட்டிருக்கின்றன.

இனி தாளப் பிரமாணம் பத்தெவை யெனில்: அவை காலம், மார்க்கம், கிரியை, அங்கம், கிரகம், சாதி களை, இலயை யதி, பிரத்தாரம் இவையே தாளதசப்பிராண மெனப்படும். இவற்றுள் காலப்பிரமாணம்—10. அவையாவன:— கணம் இலவம் காட்டை நிமிஷம்; திடி துரிதம் இலகு குருபுலுதம் காகபதமாம். இவற்றுள் கணம் தாமரை யிதழ் நூறடுக்கிய திலோரிதழினூசி செலுத்துங்காலம். கண மெட்டுக்கொண்ட திலவம்—இலவ மெட்டுக்கொண்டது காட்டை—காட்டை யெட்டுக் கொண்டது நிமிஷம்,—நிமிஷ மெட்டுக்கொண்டது துடி, துடி இரண்டு கொண்டது துரிதம்—துரித மிரண்டு கொண்டது புலுதம்—குரு விரண்டு கொண்டது காகபத மாம்.—மார்க்கம்-6 அதாவது தக்கணம், வார்த்திகம், சித்தி ரம், சித்திரதம், அர்த்த சித்திரம், அதிசித்திரம். இவற்றுள் எட்டு மாத்திரையோர் களையாகக் கொண்டது தக்கணம்— நான்கு மாத்திரையோர் களையாகக் கொண்டது வார்த்திகம். இரண்டு மாத்திரையோர் களையாகக் கொண்டது சித்திரம்— ஒரு மாத்திரையோர் களையாகக் கொண்டது சித்திரதம்— அரை மாத்திரையோர் களையாகக் கொண்டது அர்த்த சித் திரம்—கால் மாத்திரை ஒரு களையாகக் கொண்டது. அதிசித்

திரம்—நொடியளவு மாத்திரை, கிரியை-2 மார்க்கம். தேசிகம்,இவற்றுள் மார்க்கம்-8 இவற்றுணி சசதம்-4 சசததம்-4 நிசத்தமாவது, ஆவாபம் நிட்க்கிராமம், விட்சேபம். பிரவேசம்—சசததமாவது துருவம், சம்மியம், தாளம், சன்னிபாதம், தேசிகம்-8 துருவகம், சர்ப்பிணி கிருட்டியை, பதுமினி, விசர்ஜிதை, விட்சித்தம், பாதகம், பதாகை, பதிதம் என்பனவாம். அங்கம் 6—இவைமுறையே, பிறை, மதிகலை, வில், பாம்பு, புள்ளடி, முறையே யிவற்றின் பெயர். அநுதுரிதம். துரிதம் இலகு, குருபுலுதம், காகபதம், இவற்றினுற்பத்திகளும், பரியாய நாமங்களும், வண்ணங்களும், அதிதேவதைகளும், மாத்திரைகளும் அத்தாங்குலப் பிரமாணங்களும், காதைப் பிரமாணங்களும் உண்டு.—இனி கிரகம்-4 எவையெனில்:—அதீதம், அநாகதம், சமம், விஷமம். இவற்றுட் குரல் முன்னும் தாளம் பின்னும் வருவதீதம். குரள் முன்னும் தாளம் பின்னும் வருவத தநாகதம். குரலுந் தாளமுமொத்து வரில் சமம், குரலுந் தாளமு முன்னும் பின்னுங் கலந்து வருவது விஷமம் என்னப்படும்.

## சங்கீதத்தின் தத்காலஸ்திதி.

இப்படிச்சங்கீத வித்தையைப்பற்றி அமிழ்தினுஞ்சுவையுடைய தமிழ் பாஷைக்காரரும் சொல்லி யிருக்கிறார்கள். இப்போது நமது நாட்டில் சைவர், வைணவர் முதலானவர்களுடைய திருவருட்பா, திருவாசகம், திருவாய்மொழி முதலான பக்திரஸ கிரந்தங்களைத் தக்கபடி இராக தாளங்களையமைத்துப் பாடுகையில் நமக்குள் ஜனிக்கும் பிரம்மாநந்தத்தைச் சொல்லி முடியுமோ? இதனால் பரமேசுவரர் பிரபஞ்சத்திலிருக்கும் பிராணிகோடிகளில் ஒவ்வொன்றுக்கும் வேறு வேறு விஷயத்தில் விசேஷவிருப்பத்தை யுண்டாக்கி யிருந்த போதிலும் "சங்கீதமென்னும்" இனிய ஓசையில், எல்லா வித ஜீவகோடிகளும் அபேதமாக ஆநந்தம் கொடுப்பதாகக் கொண்டு சுகத்தை யனுபவிப்பது பிரத்தியக்ஷம். ஆனது பற்றியே சங்கீதத்தின் சுகத்தைக் கொடிய விஷமுள்ள பாம்

புகளும், மூடமதியுள்ள மிருகங்களும் சிறப்பு ஞானமற்ற சிசுக்களும் புத்தியற்ற பக்ஷிகளும், கேவலமான கிரிமிகீடகாதி ஜந்துவர்க்கங்களும் அறிந்து ஆநந்த மடைவதாக அறிவுடையார் அறிந்து சொன்னார்கள். இம்மட்டோ! இந்த பிரம்மானந்தமான ஆநந்தத்தையறிந்து பரமசிவன், விஷ்ணு, நந்தி, பரதர், நாரதர், யாஞ்ஞவல்கியர், கோஹலர், இராவணர், அர்ஜுனர் ஆஞ்சநேயர், சுப்பிரமணியர் பிரஹஸ்பதி முதலானவர்கள் இதற்கு அநேக இலக்கிய இலக்கண நூல்களையியற்றினார்கள். பிறகு சைதனியர், குருகோவிந்த கபீர்தாஸ், தாகூராம், இராமதாஸ், கோவிந்ததாஸ், புரந்தரதாஸ் கேசவசந்திரர் முதலான பக்த சிரோன்மணிகள் இந்தச் சங்கித கல்ப விருக்ஷத்தின் நிழலிலுட்கார்ந்து தமது பக்திரச ஜலத்தால் வளர்த்துத் தாமும் விடாய் தீர்த்துக் கொண்டார்கள். அனந்தரம் இப்படி வளர்ந்த சங்கீதகல்ப விருக்ஷத்தை பரதகண்டத்தில் பலரும்பார்த்துப் பலனையடையும்படியாக(அந்த ஸங்கித கல்ப விருக்ஷத்தை) சாமாசாஸ்திரிகள் முதலானவர்கள்கொப்புங்கிளைகளும்பெற்றோங்க வளர்த்துவிருத்தியாக்கி, யவற்றின் நிழலடியில் தாமும் தம்மைப்போலவே பின்னும் அனேகரும் சேர்ந்து விடாய் தீர்த்துக்கொண்டு சுகித்தார்கள். இப்படி கொப்புங் கிளைகளால் பெருத்து வளர்ந்து அநேகருக்குச் சுகத்தைக்கொடுத்த இந்தச் சங்கித கல்பவிருக்ஷத்தைப் பாமரரும் கண்டு கொண்டாநந்திக்கும்படி. தியாகராஜர் க்ஷேத்திரிக்கியர் முதலானவர்கள் அந்த விருக்ஷத்தைப் புஷ்பிக்கவும் பலன் கொடுக்கவும் செய்து தாமும் பரிபூரணாநந்தத்தை யடைந்தார்கள். இப்படி பூத்துக் காய்த்து கனி கொடுத்த சங்கீத கல்ப விருக்ஷத்தின் பலனை, கட்டுபல்லியார், பொல்லவரபுவாரு, வீரபத்திரையர், தாளபாகவாரு, மாத்ருபூதேசர், ஜடபல்லிவாரு, பிரதாபபூபாலர், இனுகொண்டவாரு, சிவராமபுரமுவாரு, புவரங்கர், மன்னாருரங்கர், கஸ்தூரிரங்கர், பரிமளரங்கர், சாரங்கபாணி, மல்லிகார்ஜுனர், கோன்லபுரிவாரு, வெக்கிரேல நரசிம்மாசாரியர், குலசேகர மகாராஜா, குருமூர்த்தி சாஸ்திரிகள். தீக்ஷிதர், சுப்பராய சாஸ்திரிகள்,

வீணை குப்பையர், குப்புசாமி ஐயர், முதலானவர்கள் உண்டு பல்லுயிராருக்கும் பகிரங்கப் படுத்தினார்கள். இதைப்பற்றியே தான்

நாஹம் வஸாமி வைகுண்டே ந யோகி ஹ்ருதயே ரவௌ |
மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி நாரத ||

என்னும் வாக்கியத்தினால் "வைகுண்டத்திலும், யோகிகள் ஹிருதயத்திலும், சூரியனிடத்திலும் நான் இருக்கமாட்டேன் - எனது பக்தர்கள் எங்கு இனிய கானம் செய்கிறார்களோ அங்கே நான் இருப்பேன்" என்னும் பகவத் வாக்கியம் புறப்பட்டது போலும். இதைப்பற்றி வேறோர் நூலைப் பார்க்கையில்; பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், ஆகிய பஞ்சபூதங்களில், பிருதிவியாகிய பூதத்தில் மிருதங்கமும், அப்புவாகிய பூதத்தில், சங்கும், தேயு, பூதத்தினால் காஞ்சாதி தாளங்களும், வாயு பூதத்தினால் வீணைமுதலான வாத்தியங்களும், ஆகாயமென்னும் பூதத்தினால் நாதமும், நாதத்தினால் எழுத்துக்களும், எழுத்துக்களினால் பதங்களும், பதங்களினால் வாக்கியங்களும், வாக்கியங்களினால் உலகவிவகாரங்களும் நிகழ்வதனால், ஜகத்தும் அதிலுள்ள பொருள்களும், அவற்றின் கர்த்தாவாகிய ஜகதீசுவரனும் இந்தச் சங்கீதத்தின் ஆதீனமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி சர்வோத்கிருஷ்டமான நமது தேசத்து சங்கீதமானது ஒரு காலத்தில் மஹோன்னத தசையிலிருந்தது. பிறகு நாளாவட்டத்தில் அபரிசுத்தமான சேர்க்கையினாலோ மற்றெந்த ஹேதுவினாலோ தாழ்ந்த ஸ்திதிக்கு வரச்சம்பவித்தது. கடைசியாக ஏனைய நாட்டார் நமது தேசத்தின் மீது அடிக்கடி படையெடுத்து வந்து நமது தேசத்தின் உத்கிருஷ்டமான சாஸ்திரங்களைச் சுட்டு பஸ்மமாக்கியபோது இந்தச் சங்கீத சாஸ்திரங்களும் மறைந்துபோய்விட்டன. இப்போது நமது தேசத்தை அரசாட்சி செய்யும் ஆங்கிலேயர் ஞானசீலர்களாயும், சிரேஷ்டமான கிரந்தங்களைப் பாதுகாத்து விருத்திபாக்கும் தருமகுண முடையவராயும் இருக்கினும் இத்தேசத்து சங்கீதசாஸ்திரத்தை விருத்தியாக்க பிரவர்த்தித்தார்களில்லை.

வனெனில், இந்த சாஸ்திரத்தின் அருமையையும், உண்மையான நிலையையும அறியும்படியான சக்தி அவர்களுக்கு இன்னும் வரவில்லை. இதற்குக் காரணம்: காந்தர்வம் கவித்துவம் சூரத்துவம் தானசிலத்துவம், ஆகிய நான்கும் ஜன்மாந்தர பலனால் கிடைப்பதென்று நமது முன்னோர் சொல்லியிருப்பதனாலும், இந்துவென்று இத்தேசத்தில் உடம்பெடுத்து, இந்தச் சங்கீத வித்தைக்காகப் பன்னிரண்டு வருஷம் இரவும்பகலும் கஷ்டப்பட்டாலும், அவர்களில் யாரோ சிலருக்குக் கிஞ்சித் பலன் கிடைப்பது கஷ்டசாத்தியமாக விருப்பதனாலும், இதை ஜாதி, மத, பாஷா வேஷாதிகளில் வேறான அங்கிலேயர் அதிசிக்கித்த்தில் சிக்கறக் கற்றுத் தெளிவது அசாத்தியமல்லவா? மேலும் நமது சங்கீதமானது இங்கிலீஷ், பிரான்சு, இத்தாலியா, முதலானவர்களுடைய சங்கீதத்தைப்போல ஒருபடியிலும், நிலையிலும் நிற்கும் சங்கிரக சாஸ்திரமல்ல. இதற்கு ஒரு திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறேன் கேளுங்கள்; நமது கீதங்களில் ஒரு இராகத்திற்கே பல பண்டிதர்கள் பலவிதமாக எழுதியிருக்கிறார்கள். எப்படி யெனில், ஆநந்தபைரவி இராகத்திற்கு லக்ஷணம் ஆரோஹணத்தில் ஸ, ரி, ம, க, ப, த; நி, ஸ, என்று ஒரு பண்டிதர் கொள்கை. ஸ, ம, ரி க, ப, த, ப, ஸ, என்று ஒரு பண்டிதர் கொள்கை. ஸ, ம ரி, ம, க, ப, த, ப, நி, என்று ஒரு பண்டிதர் கொள்கை. இப்படி பலர் பலவிதமாகக் கொண்டாலும் எதுவும் லக்ஷணவிருத்தமல்லாமலிருப்பது போலவே அநேக இராகங்களுக்குமிருக்கும். அங்கிலேயர் இத்தியாதிகளை யறிந்துய்வது சுலபசாத்தியமோ! ஆகவே, ஆங்கிலேயரும் அசட்டையாக விட்டார்கள். அப்படி விடவே, நமது சங்கீதமானது ஆதார போஷணை யற்றுத் தத்தளிக்கச் சம்பவித்தது. அப்படி சம்பவிக்கவே, நம் நாட்டில் நல்ல சங்கீத வித்துவான்கள் தலையெடுத்தாடத் தங்குமிடமின்றித் தாயற்றபிள்ளைகளைப்போல் தவிக்கிறார்கள். இப்போது சங்கித வித்தையைக் குலமக்களுக்கும் தலைமக்களுக்கும் பத்ததிரீதியாகக் கற்பிக்கும் பாடசாலைகளை நமது நாட்டில் கிடையா. அப்படி கிடையாமல்

போகவே, சங்கீதத்தின் பெருமையைக் காட்டுவதில் பிரதானமான கீதங்களும், இந்த கீதங்களினால் வெளியாகும் ஆரோஹண, அவரோஹண, ஜனிய,ஜனக,வர்ஜ,சுவர, கிரஹ மூர்ச்சனாதிகளான இலக்கணங்களை மறந்து தம் தம் இஷ்டப்படிப்பாட இடமாயிற்று. கவிபாடுவதற்கு இலக்கணமெப்படி யின்றியமையாததோ, அப்படியே சங்கீத வித்தைக்கு கீதங்கள் இன்றியமையாதவை. ஆனதுபற்றியே முற்காலத்து வித்துவான்கள் 500 - 600 கீதங்கள் வரையில் முதலில் பத்ததிரீதியாகப் படனம்செய்து பிறகு,பதங்கள் முதலானவைகளைக் கற்றுவந்தார்கள். அப்போது அவர்களுக்குச் சங்கீத ஞானமும் பிரபலமாக விருக்கும். இப்போதோவெனில்,சிலர் கொஞ்சம் சுவராவளியையும், அலங்காரத்தையும், பிள்ளாரி கீதத்தையும், இரண்டொரு வர்ணங்களையும் பாடக்கற்றுக் கொண்டவுடனே தமக்கு சங்கீத வித்தை பூரணமாக வந்து விட்டதென்று பதங்களையும், ஜாவளிகளையும், தங்கம்பாட்டு, தென்பாங்கு, சக்கிலிச்சிப்பாட்டு, தில்லேலோபாட்டு, சேவல் பாட்டு, நெல்லுகுத்தும் பாட்டு, சுப்பையன் பாட்டு, முத்து வீராயிப்பாட்டுகளைக் கற்றுக்கொண்டு வெளியில் வந்துவிடுகிறார்கள். இம்மட்டேயல்ல - சிலருக்கு சா என்னும் சுரத்தைக் கற்றுக்கொள்ளும் போதே தமக்கு சங்கீத வித்துவானென்ற மமதை வந்துவிடுகிறது. இத்துடன்கூட இப்போது நமது நாட்டுச்சங்கீதகச்சேரியிலிருக்கும் அநேகருக்குஇராகத்தின்சாராம்சமேதெரியாது. சிலருக்குஇராகவித்தியாசங்களும் தெரிகிறதில்லை. சில சமயங்களில் எவராவது ஒரு வித்வான் தோடி ராகத்தைப்பாடி முடித்த பிறகு அருகிலிருக்கும் ஓர் தனவந்தர், அந்த பாடகரை நோக்கித் தமக்கு சங்கீதத்தில் விசேஷ பரிசயமும் இராக ஞானமும் இருப்பதை வெளியிடும்பொருட்டு, ஐயா பாடகரே ! கொஞ்சம் தோடி ராகத்தைப்பாடும் என்று சொல்வதுண்டு. இப்படிச்சொல்லுவதினால் சபைக்குப் பரிஹாசமும், பாடகருக்கு மனச் சங்கடமுமுண்டாவதுண்டு. சிலர் பாட்டுக் கச்சேரி நடக்கும்போது பாட்டுகளைக் கேட்காமல், அப்போதுதான் தம் சொந்த கிரஹ

கிருத்திய சுக துக்கங்களைப்பற்றி வச வச வென்று பேசிப் பிறர் கேட்கும் சுகத்தையும் கெடுப்பார்கள். சில தனவந்தர் அந்தப் பாட்டுக் கச்சேரியில் பாடின பாட்டுகளைக் கேட்டு "என்ன ஐயா? தாங்கள் தோடிராகம், பைரவி ராகமென்று பெயர்வைத்து சந்தோஷப்படுகிறீர். எனக்கு ஒன்றுக்கொன்று வித்தியாச மிருப்பதாகத் தோன்றவில்லை, எல்லாம் ஒரே ராகமாகவும், சராகமாகவும் இருக்கிறதேயென்பார்கள்.

மேலும், தினப் பிரதிதினம் தேக சுகத்துக்கும், தேவதா பக்திக்கும் இன்றியமையாத பரிசுத்தமான சங்கீதத்தைப் பெரும்பான்மையோர் தக்கபடி அடிக்கடி உபயோகிக்காமல் உபேக்ஷித்து விட்டார்கள். யாரோ சிலருக்குச் சங்கீதத்தில் பிரியமிருந்தபோதினும், அவர்களும் தத்தம் வீடுகளில் பத்தோ பதினைந்தோ வருஷங்களுக்கு ஒரு தடவை அத்திபூத்ததுபோல நடக்கும் விவாஹகாலத்தில் மாத்திரம் உபயோகப்படுத்தி இடையில் பாடவரும் பாடகரைப்பார்த்து இப்போது நமது வீட்டில் கலியாண முதலான சுபகாரியங்களில்லை, ஆகவே பாட்டுகளைக்கேட்க சரிப்படாது என்று சொல்லிவிடுகிறார்கள். இப்படி நமது நாட்டுப் பிரபுக்கள் சங்கீதத்தை போஷிக்காமல் விடவே சங்கீத வித்துவான்கள், பத்ததி ரீதியான பாட்டுகளையும் வீணையாதி திவ்யமான வாத்தியங்களையும் விட்டு முதிர்ந்த கோதுமை மணிகளோடு நிறைந்து நடிக்கும் பயிர்களுக்கிடையில் வெறும் புல் பூண்டுகளாகிய களைகள் முளைத்து ஷ கோதுமைப் பயிர்களை மூடிக் கொண்டு படாடோபம் போட்டுப் பகட்டுவதைப் போன்ற சமீபகாலத்துக்கு முன் மஹம்மதியரால் நமது நாட்டுக்கு வந்த சாரந்தா முதலான வாத்தியக் கருவிகளையும், ஐரோப்பியரால் நமது நாட்டுக்கு வந்த பிடில் முதலான வாத்தியக் கருவிகளையும் கற்றுக்கொண்டு இங்கிலீஷ் பாஷையைக் கற்ற சில பிரபுக்களுக்கு இனிக்கும்படியான இந்துஸ்தானி, டப்பா, ஜாவளி, இங்கிலீஷ் மெட்டுகளைப் பாடிப் பிழைக்கப் பெரிய வித்துவான்களாகப் புறப்பட்டார்கள். இவர்களையும் நமது நாட்டு பிரபுக்கள் தக்கபடி போஷிக்காமையால், சங்

கீதத்தின் அருமையே அடியோடு குலைந்து ஆதரவற்றுக் கடைசியாக "அப்பன் தேடிவைத்த அரும்பொருள் அழியவும், அன்னை யூட்டிவளர்த்த அழகு உடம்பு வடியவும், முன்னோ ருபதேசித்த மூதுரைகள் கழியவும், பெரியோர்கள் மனம் நொந்து பழிப்புகள் சொரியவும், நல்லோர் தம்மை விட்டுப் பொல்லாரைச் சேரவும், பெற்றோர் உற்றோர் மனைவி மக்கள் வயிறெரிந்து பேதைகளாக நின்றழவும், பொய், கோள், மோசம், நாசம், சூதுவாதுகள் பாலும் பழமாகவும், இகத்துக்கும் பரத்துக்கும் இழிவு பட்டொழியவும் செய்யக் கூடிய தாசி வேசிகள் வசமாகி அவர்களது போஷணைக்கு தத்தமாகிவிட்டது.

இப்படி யாகிவிடவே, இயற்கையில் இனிய குரலோசையைப் படைக்கப்பெற்ற ஸ்திரீ ஜாதிகளில் சாமான்னியமாகிய தாசிகளென்போர் விலைமதிப்பான உடைகளையும் தளுக்கு மெளுக்கான தங்க நகைகளையும் கொண்டு இல்லாத அழகை இரவலாகவாவது பெற்றும் மனோரம்மியமாக சிங்காரித்துக்கொண்டுஞ் சங்கீத கச்சேரிகளில் இன்னிசையோடு பாடில் யார் மனதுதான் கரையாது? கேவலம் ஸ்திரீகளுடைய முகாரவிந்தங்களைக் கண்டமாத்திரத்தில் விசுவாமித்திரரைப்போன்ற தபோநிதிகளான மஹர்ஷிகளுடைய மனமும் மெழுகுபோல் கரைந்துருகி மோசம் போனார்களெனில், இனி கலியுகத்தில் ஜனித்தவர்களுடைய ஸ்திதியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஆகவே, பாட்டுக் கச்சேரிகளுக்கு வரும் சில வாலிபர் சங்கீதத்தின் பெருமையையும் சங்கீத வித்வான்களுடைய பெருமையையும் பாராட்டாமல் இன்னிசையால் குயிலையும் வெட்கச்செய்யும் பரத்தையரிடம் பரிபூரண பிரேமையைக் காட்டிப் போஷிக்கவே, பாடகராகிய சில புருஷ வித்துவான்களுக்கு பிரபுக்களுடைய பொறுப்பும் போஷணையுமற்று அவர்கள் பரத்தையர்களுடைய போஷணைக்கும், கிபார்சுக்கும் எதிர்பார்த்தும் தமது ஜாதி மதாசாரங்களை மறந்தும் தாசி வீடுகளிலேயே சதா வரத்துப் போக்காகிக்கொண்டு வாசஞ்செய்ய சம்பவிக்கின்றது. இப்

படிச் சம்பவிக்கவே, பாடகராகிய சில புருஷவித்துவான்கள் பிறப்பில் உயர்ந்த ஜாதிக்காரராக விருந்தாலும், அவர்களை நாட்டகத்தினுள்ள தலைமக்களும், குலமக்களும் தமக்குச் சமமாகக்கொண்டு மதிக்காமலும், தமக்கருகி லுட்காரவைக்காமலும் சில சமயங்களில் தாசிகள், வேசிகள், மேளக்காரர்களுடன் உட்காரும்படி செய்கிறார்கள். இப்படி சங்கித வித்தைக்கும் சில சங்கீத வித்துவான்களுக்கும், பெருமையும் பிரதிஷ்டையும் குறையவேயல்லவா சங்கிதத்தைக் கற்க விரும்பும் நமது நாட்டு வாலிபரையும், பாட்டுகளைப் பாடும் பாலியரையும், பெரியோர் காணும்போதெல்லாம் அவர்களை துஷ்டரென்றும், சஹவாசத்துக்கு அயோக்கியரென்று நிந்திக்கிறார்கள். அந்தோ! ஆரிய தேசத்தாருடைய அருமைக்கும் பெருமைக்கும் அதிகச் சிரேஷ்டமான சங்கீதமே! உனது பெருமையும் இப்படி பாழ்த்துபோக எவரிட்ட சாபமோ! அல்லது கலிகாலத்தின் தோஷமோ! ஓ எனது ஜனன தேசத்தார்களே, இந்த பரிசுத்தமும் பிரம்மானந்தமுமான சங்கிதத்தை நீங்கள் இப்படி அசட்டை செய்து அந்நிய நாட்டார் அவமதிக்கச் செய்வது அழகாமோ? இதுவும் உங்களுக்கு நியாயமும் தருமமுந்தானா? நமது முன்னோர்களுடைய மகிமையைப் பெற்ற சங்கீதமானது நமது போஷணைக்கும், பாதுகாப்புக்கும் பாத்தியப்பட் டிருக்கவில்லையா? நாம் இவ்வுலகத்தார் மெச்சும் இந்துவென்கிற பிறப்பும் பெயரும் பிரதிஷ்டையும் பெற்றுப் பரிமளிக்க விரும்பும்போது இந்த பிரதிஷ்டைக்குண்டான பலகாரணங்களி லொன்றாகும் இந்த இந்து சங்கீதத்தை இப்படி இழிவுபடச் செய்தால் ஈசுவரன் சித்தத்துக்காவது பொருந்துமோ? எனது உடன் பிறப்புகளாகிய சுதேசிகளே, இத்தியாதி கேள்விகளைக் குறுகிய கருத்தோடின்றி விரிந்த சுயபுத்தியினால் யோசித்துப் பாருங்கள். இனிமேலாகிலும் குற்றுயிராய்த் தவிக்கும் இந்து சங்கீதத்தைத் தழைத்தோங்க நாட்டகத்தில் பல சங்கீத சபைகளையும், பாடசாலைகளையும் ஸ்தாபித்தும் பரதகண்டத்தின் பரிசுத்தமான சங்கீதத்தைப் பேருலகெங்கும் பரவச் செய்வித்தும் அதனால் பரமகிருபாளுவாகிய பரமாத்துமாவைப்போற்றிப் பரிபூரணாநந்தம் பெற்று பிரபஞ்சத்தில் பெரும்புகழுடன் வாழலாம் வாருங்கள்! வாருங்கள்!

ஓ சங்கீதமே நின் பெருமை பிரகாசிப்பதாக.

———(0)———

குறிப்பு.—சமீப காலத்துக்கு முன் சங்கீத வித்தையை பரிபாலிக்க வங்காளம், பொம்பாய், பூனா, சென்னை முதலான விடங்களிலுள்ள தலைமக்களும் குலமக்களும் பிரவர்த்தித்தார்கள். பொம்பாய் கவர்னரவர்கள் சென்னைக்கு வந்திருந்த போது ஷெ பிரபு அவர்களுக்குச் சந்தோஷ மூட்டி மரியாதைசெய்ய, பச்சையப்பனார் சபா மண்டபத்தில் சென்னை காயன் சமாஜத்தா ரென்னும் சங்கீத சபையார் சங்கீத கச்சேரி வைத்தார்கள்; அப்போது ஐகோர்ட்டு ஜட்ஜியாகிய கனம்பொருந்திய ம-ா-ா-ஸ்ரீ முத்துசாமி ஐயரவர்கள் நமது சங்கீதத்தின் பெருமையைப்பற்றி ஒரு வியாசம் வாசித்தார். அதை இதனடியில் பதிப்பித்திருக்கிறேன்; அதனால், அவர் கருத்து எனது கருத்துடன் பொருந்தி யிருப்பது பிரத்தியக்ஷமாகப் பார்க்கலாம்.

## NATIVE MUSICAL ENTERTAINMENT.

### POONA GAYAN SAMAJ.

(*The Madras Mail, Tuesday Evening*, 22*nd Dec.* 85.)

The Madras branch of the Poona Gayan Samaj gave a musical entertainment at Pachiappa's Hall, last evening, to which Lord and Lady Reay and Mr. and Mrs. Grant Duff were invited. The entertainment was to have begun at 4-30 P. M., but His Excellency Mr. Grant Duff and Lady Reay, accompanied by Major-General Annesley and Captain Lawford A. D. C., did not arrive till 4-45 P. M. Lord Reay did not attend. Mr. Grant Duff, on his arrival, expressed his regret at Lord Reay's inability to be present at the entertainment, in consequence of indisposition; the doctor had forbidden his going out. Lord Reay was extremely sorry himself that he should not have been present. There was a large attendance of visitors; among them being the Hon'ble C. G. Master, the Hon'ble Mr. Justice Muthuswamy Aiyar, Major General Chamier, Mrs. and

Miss Chamier, Miss Carr, Mr. and Mrs. J. Adam, Dewan Bahadur Raghunatha Rau, Lieut Colonel Major Colonel and Mrs. Luxmore, Mr. and Mrs. R. N. Pogson, Mr. G. Hamnett, the Hon'ble H. H. and Miss Sheppard, Colonel and Mrs. Underwood, Mr. V. Bhashyam Aiyengar, Hon'ble T. Rama Rau, Mr. T. Varada Rau, Dr. and Mr. Duncan, Rev. Dr. Miller C. I. E., Mr. P. S. Ramasawmy Moodelliar C. I. E., Mr. and Mrs. F. H. Hamnett, Mr. W. S. Vencataramanjulu Naidu, Mr. P. Ananda Charlu, and Mr. P. Somasundram Chetty. An opening song having been sung by Mr. D. Srinivasa Aiyangar, Mr. Justice Muthusawmy Aiyar read a paper on Hindu music from which we take the following:

YOUR EXCELLENCIES,

I have been asked to say a few words this evening on Hindu music. It is often the fashion to speak of Hindu music with little or no regard, as if it has no scientific basis. In its modern practice as an art, there are, no doubt, imperfections which justly provoke criticism. I may refer to our street music in temple and other processions, and it is at times so shrill and loud that it is heard a quarter of a mile all round. I may also allude to those gesticulations from which even some of our best artists are seldom free, and they are occasionally, I am willing to admit, odd enough to drive one mad. I may further mention the indications in our modern art of corrupt taste which would be tolerated in no polite society. I would next draw attention to the later unwise infringement of the fundamental canons

of melody for the purpose of showing expertness in keeping time. Lastly, I may notice some traces of an effete art which, on some occasions, ignores nature and simplicity as the fountain of all true elegance, purity and pathos. Sensible as I am of these shortcomings I still maintain that our system of national music is both a science and an art. I regard the imperfections already indicated, as the mere outer encrustations of a classical art in which there is much to admire and much to preserve and improve. It is no matter for surprise that such should be the case. The influence which music exercises, and has, for centuries, exercised over the Hindu mind is considerable. The Natives of this country often derive pleasure from it, even during intervals of sickness, and forget, though but for a short time, that they are ill. In moments of despondency, its power in raising our drooping spirits will be acknowledged by all. I may add that even the afflicted who miss consolation elsewhere at times find it in those solemn and sonorous hymns which, when sung with feeling and melody in praise of God, stir our hearts to their utmost depths. I know hardly a festivity in this country, domestic or national, in which an important part is not assigned to music in some form or other. The influence I mention is felt not only in this Presidency, but according to my information, all over India, from the Himalayas to Cape Camorin. I can name, from my own personal knowledge, several important towns in the provinces where one may repeat with special appropriateness the words in the immortal poet,

But music for the time doth change his nature
The man that hath no music in himself
Nor is not moved with concord of sweet sounds
Is fit for treasons, stratagems and spoils ;
Let no such man be trusted.

That music should exercise so extensive a dominion in this country, is not to be wondered at. Even in the Vedic times, it was cultivated as an art. The hymns of the Rig and Yajur Vedas were set to music at a very early period. Though the art, as then cultivated, was imperfect, yet the Vedic musical chant, composed in simple Sanskrit spoken 3,000 years ago, and handed down from generation to generation through more than thirty centuries, has a thrilling effect upon a cultivated Hindu mind. In the composition of the Sama Veda, we see the first development of music as a science. It recognized but five notes, Dha, Ni, Sa, Ri and Ga corresponding to A B C D and E. The necessity for a further development was soon felt, and the experts, who are called Gandharvas in classical literature, added two more notes, viz., Ma and Pa, corresponding to F and G. Thus arose the Hindu Octavo or Gamut in the Vedic period. The ancient writings on Hindu music are designated Gandharva Veda. They contain valuable information as to first principles and cardinal rules which are to be remembered in connection with vocal and instrumental music. They also treat of the origin of sound, of various modulations of voice, of the formation of several species of scales, of the theory of intervals of time, and of its variations in subordination to the prescrib-

ed measure, I may here refer to a legend which graphically illustrates the power of music. The giant Ravana, whose conquest by Rama, Valmiki, the Homer of India, has immortalized in classical epics, like Milton's Satan, took it into his head to contest the supremacy of the great God Siva, and with unprecedented audacity, proceeded to the mountain of Kailas, and shook it in contemptuous defiance of Siva's omnipotence. The seraphs and angels who were in attendance were filled with terror but Siva, says the legend, remained impregnable and unmoved. He pressed down the mountain with his toe, and Ravana was in danger of being crushed. It then occurred to him that the only way out of peril in which his folly had placed him was sincere and heartfelt repentance. He then poured forth with all the the fervour of subdued humility, the strains of Sama Veda, which are likened to the music of the spheres and so far appeased the angry God that the rebel was at once forgiven. Such was the esteem in which music was held in ancient India. The impulse which the art thus received, it retained throughout the classical period of our history. It continued steadily to progress and in classical literature, poetry, Puranas and other writings, we find numerous allusions to the melody of vocal and instrumental music, to renowned experts and to the importance of instruction in music in affluent and royal households and the hold which music thus gained on the national mind it has never since lost. To this day our great epic poem, the Ramayana, is not read but sung by every gentleman from the prince to the peasant who

likes it. As one of the fine arts music received special patronage through successive Hindu dynasties. In later times more attention was paid to it as an art than a science and to elaborate and tedious artistic skill than to simple and natural melody. Technical rules came thus into prominence and marred the classical sweetness of our music. In certain parts of the country, the art fell into bad hands, and left the homes of the upper and gentle middle classes, and it thereby suffered both in simplicity and purity of taste. The primary object which the Gayan Samaj has in view in this presidency is to remove the imperfections which I have mentioned, to revive whatever was good in Hindu music as a science and an art, to brush away latent incrustations, to restore it to its dignified position as a fine art, and to form a class of educated gentleman artists to whose care its future development may be safely entrusted.

Comparing the Hindu with the European system of music, it is not possible to avoid the impression that the two systems have widely diverged from one another, though they were originally derived from a common source. The dominant factor in the Hindu system is melody and that in the European system, is harmony. Harmony arises from the agreeable concord of simultaneous notes whereas melody is produced under the Hindu system by the combination of successive notes into a relation of harmony. In conclusion, I must confess that we have as yet made a very humble beginning. But the revival of Sanskrit literature and the study of Sanskrit

n the Universities, will afford a great impetus to the evival of *Hindu* music. If the study of music is, under avourable auspices, made part of school curriculum, t will afford us facility. When the art engages a arge share of attention in the country, a degree in music may, with advantage, be instituted in our Universities. In this, as in other movements, conductive to our national progress, and especially in this transitional period, we have the active sympathy and support of several hundred ladies and gentlemen. The Gayan Samaj entertains a sanguine hope that the revival and regeneration of *Hindu* music will, at no distant date, together with many other reforms, form the happy outcome of that ilver wedding so feelingly predicted by Lord Ripon between the modern thoughts and feelings of the West and those of the East. (Applause).

A programme of native music, both vocal and instrumental, was next gone through as follows:—

| *By Whom.* | | *Names of Ragams.* |
|---|---|---|
| Mr. C. R. Krishna Row<br>,, T. A. Murtheir<br>,, Sheshachella Naidu | Vocal. | Ragamalika or a chain, of ragas, *viz*, Piatab Chintamani, Abaj and Poornachandrika. |
| ,, N. Shanker Row | Vocal. | Kalanithi. |
| ,, N. Visvanatha Row | Instrumental | Khaffe. |
| ,, B. Sounder Iyer | Vocal. | Athana. |
| ,, Venkat Ramaya | | Kalyanee. |
| Messrs Singara Charlu & Brother | Instrumental | Kantal Varalee. |

| | |
|---|---|
| Professor Seshagiri Sastri M. A. & brother Mr. Venketes Sastri. | Instrumental Yinjotu Eishmanohari. |
| Mr. Singara Charlu & students. | God save the Queen in Sanskrit. |

His Excellency Mr. Grant Duff then said :—

"LADIES AND GENTLEMEN.—In the absence of His Excellency Lord Reay, Governor of Bombay, on account of indisposition, which we all, no less than himself regret, it falls to Lady Reay and myself, and of all the ladies and gentlemen present, around me, to the persons who organised this entertainment, to the performers, and last, though not least to Mr. Justice Muthusawmy Aiyar, who gave us so interesting a paper on Hindu music. I have learnt during the last few years to admire my honorable friend in many capacities, but I did not know till this afternoon, in spite of his modest *demeanour*, that he was an authority on that art which begins where all others end, which, when sculpture, painting and poetry have had their say, takes up our thoughts and carries them away so far, I suppose, as it is permitted for them to be carried in this present state of existence. Once more I thank you for all your kind and interesting entertainment."

The Hon'ble T. Rama Row then expressed how highly honored the Samaj and all present had felt at the presence of their Excellencies Lady Reay and Mr. Grant Duff, and proposed a cordial vote of thanks to their Excellencies for having kindly attended. The meeting then terminated.

---

